3

9-1

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# வேதாந்த சித்தாந்த சமரச விளக்கம்

இந்நூல்

விருத்தாசலம்

வடக்கு கோட்டை வீதி

வேதாந்த மடம்

**சிதம்பர சுவாமிகள்**

இயற்றியது.

**K. நாராயணசாமி பிள்ளை, B. A., B. L.**

வழக்கறிஞர் அவர்களால்

பதிப்பிக்கப்பெற்றது.

விருத்தாசலம்.

1960

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# வேதாந்த சித்தாந்த சமரச விளக்கம்

இந்நூல்

விருத்தாசலம்

வடக்கு கோட்டை வீதி

வேதாந்த மடம்

**சிதம்பர சுவாமிகள்**

இயற்றியது.

**K. நாராயணசாமி பிள்ளை, B. A., B. L.**

வழக்கறிஞர் அவர்களால்

பதிப்பிக்கப்பெற்றது.

விருத்தாசலம்

1960

9-1

உ

சரவணபவாய நம:



## சுப்பிரமண்யர்

மறையெலாம் பரவ நின்ற
மாணிக்க மலையே போற்றி
சிறையெலாந் தவிர்ந்து வானோர்
திருவுறச் செய்தோய் போற்றி
குறையெலா மறுத்தே யின்பங்
கொடுத்தருள் குருவே சைவத்
துறையெலாம் விளங்கு ஞானச்
சோதியே போற்றி போற்றி.

# பொருளடக்கம்

எண் பக்கம்

எண் பக்கம்

உ
ஓம் தத்சத்
கணேசாய மங்களம்

# முன்னுரை

---

## இந்நூலாசிரியர் குரு சம்பிரதாயம்

உடையார்பாளையமென வழங்கும் முற்கபுரி க்ஷேத்திரத்தில் கார்காத்த வேளாளர் மரபில் சைவசமயாசாரவனுஷ்டானங்களில் சிறந்தவராயிருந்த சபாபதி பிள்ளைக்கும், அவர் மனைவி பொன்னம்மாளுக்கும் பூர்வஞ் செய்த தவப்பேற்றினால், கலியுகம் 4961க்குச் சரியான ரௌத்திரி ஞு புரட்டாசி மீ 10௨ உத்திராட நக்ஷத்திரத்தில் **ஸ்ரீ ஆறுமுக ஞான தேசிக சுவாமிகள்** அவதரித்தனர். பால்ய வயதிலேயே சைவசமயாசாரவனுஷ்டானங்களும் கடவுள் வழிபாடும், உலகியற் கல்வியும், வீட்டியற் கல்வியும் கூடவே வளர்ந்துவந்தன. பிதா சொற்கிசைந்து விவாகஞ்செய்து கிரகஸ்தாசிரமத்தில் உபாத்தியாயர் தொழிலில் சில காலம் இருந்து, வயது 32 ஆண்டளவில் மனைவி தேக வியோகமானவுடன், தன் பிதா சபாபதி பிள்ளையும், சிறிய பிதா சுப்பராய பிள்ளையும், எனது பிதா ஆறுமுகம் பிள்ளையும் ஆகமபுராணாதிகளிலும் சைவசமயாசாரவனுஷ்டானங்களிலும் சிறந்து விளங்கிய மூவரும் ஒருமனதாய் ஏற்கனவே நடத்தி வந்த அறுபத்துமூவர் குரு பூஜைகளையும் தாமும் முயல்வுற்று நடத்திவந்தார்கள். பின், அவர்கள் பிதாவும் எனது பிதாவும் ஆபத் சந்நியாசம் பெற்று சிவபதமடைந்தார்கள்.

இறைவனருளால் பரிபாக காலம் வர துறவாசிரமத்தில் விருப்பமுடையவர்களாய் திருமழபாடி என்னும் க்ஷேத்திரத்தில் பிர்ஹ்ம நிஷ்ட சீவன்முத்தர்களாய் அவதூதளாயிருந்த

ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகளைச் சற்குருவாகச் சரணமடைந்து ஞானோபதேச வாயிலாகப் பூர்ணனுக்கிரகம்பெற்று ஈஸ்வரன், குரு, ஆத்மா மூன்றும் ஏகரசமாக விளங்கும் அப்பிரதிபந்த அபரோக்ஷ சாக்ஷாத்கார ஞானமுள்ளவர்களாய் சகசானுபவத்துடன் தானடைந்த பேறு உலகம் பெற பெருங் கருணையினால் உடையார்பாளையத்தில் வேதாந்த பிரவர்த்தக மடம் ஒன்றை ஸ்தாபித்து வசித்து, சீவர்கள் நற்கதியடைய பக்தியே காரணம்; அதற்கு சைவ சமய நெறியே முக்கியமென்று சைவ சமயாசாரியர்கள் சரித்திரத்தைப் போதித்து சமயகுரவர்கள் குருபூஜையும், தனது சற்குரு ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகள் குருபூஜையும், ஸ்ரீ சங்கர ஜயந்தியும் பிரதி வருஷமும் நடத்தியும், அக்காலங்களில் தரிசனத்திற்கும் உபதேச மொழிகளைக் கேட்பதற்கும் வருகின்ற பக்தர்கட்கு ஈஸ்வர பக்தியும் குரு பக்தியுமுளதாகுமுறையில் தக்கவாறு பஞ்சாட்சரவுபதேசமும் வேதாந்த சாஸ்திரார்த்தங்களைப் போதித்தலுஞ்செய்துவந்தார்கள்.

சீடர்களுக்கு ஈஸ்வர பக்தி அதிகரிக்கும்பொருட்டு ஸ்ரீ தண்டாயுதபாணி விக்கிரகம் ஸ்தாபனஞ்செய்து திருக்கோயில் கட்டி கும்பாபிஷேகம்செய்து சீடர்களைக்கொண்டு நித்திய பூஜையும் கிருத்திகை முதலிய விசேஷ பூஜைகளையும் செவ்வனே நடைபெறச் செய்வித்தும், மேலும், வெளியூர்களில் செந்துறையில் ஸ்ரீ திருஞான சம்பந்த சுவாமி மடம் ஒன்றும், கொல்லாபுறத்தில் ஸ்ரீ திருஞான சம்பந்த சுவாமி மடம் ஒன்றும், சாத்துக்குடலில் ஸ்ரீ அப்பர் சுவாமி மடமும், வெள்ளூரில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமி மடமும், கீரமங்கலத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமி மடமும், பெண்ணுகடத்தில் ஸ்ரீ மறைஞான சம்பந்த சுவாமி மடமும் ஸ்தாபனஞ்செய்வித்து, மடங்கள்தோறும் அந்தந்த மடத்திலும் உற்சவ மூர்த்திகளைப் பிரதிஷ்டைசெய்து நித்திய பூஜை, வருஷ குரு பூஜை, உற்சவாதிகள் நடைபெற்றுவரும்படி அங்கங்குள்ளவர்கட்கு சைவ சமயத்தில் பற்றுள்ளவர்களாயனுஷ்டித்து

வரும்படி போதனைசெய்தும், காவனூரில் ஸ்ரீ சங்கரர் மடம் ஏற்படுத்தி ஸ்ரீ சங்கரர் படம் ஸ்தாபனஞ்செய்து நித்திய பூஜையும் ஸ்ரீ சங்கர ஜயந்தி கைலாய யாத்திரையும் நடத்தி வரும்படி ஏற்பாடுசெய்துள்ளார்கள்.

தன்னை சரணாகதியாக வந்தடைந்தவர்கட்கு அத்வைத நிச்சயம் உண்டாகும்வண்ணம் வேதாந்த சாஸ்திரங்களைப் பாட முறையாக உபதேசித்துக்கொண்டு வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலையிலிருந்த ஸ்ரீ ஆறுமுக ஞான தேசிக சுவாமிகளை இந்நூலாசிரியர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் சற்குருவாக சரணமடைந்து, 1902ம் ௵ முதல் கூடவே வசித்து ஆத்தம் அங்கமாதி பணிவிடைசெய்து, மடத்தின் நிர்வாகம், குரு ஆஞ்ஞைப்பிரகாரம் நடத்தியும், பிர்மசரிய விரதமுள்ளவர்களாய் வேதாந்த சாஸ்திரங்களை முறையாகப் பாடங் கேட்டும், 1931ல் பிரஜோர்ப்பத்தி ௵ பங்குனி ௴ 27௳ கிருத்திகை நக்ஷத்திரத்தில் ஸ்ரீ சற்குருநாதன் விதேககைவல்லியமானதும் சமாது கிரியைகளைச் செய்தும், அன்பர்கள் உதவியால் சுமார் 20000 ரூபாய் செலவில் கோயில் கட்டி கும்பாபிஷேகஞ்செய்து நித்திய பூஜை, குரு பூஜை நடந்து வரும்படி செய்துள்ளார்கள்.

பிறகு, குருமூர்த்தியின் பூர்வாசிரமத்தைச் சார்ந்த ஸ்ரீ ரெங்கசாமி சுவாமிகளுக்குக் காஷாயங் கொடுத்து சந்நியாச ஆசிரமத்தை வகித்துவரும்படி நியமனஞ்செய்து திருக்கோயில் மடம், அவை சார்ந்த சகல சொத்துக்களையும் ஒப்புவித்து, இதுவரை நடந்துவந்ததுபோல் இனிமேலும் எப்போதும் நடத்திவரவேண்டிய ஏற்பர்டு செய்துவிட்டு, சில காலம் சிதம்பரத்திலும், சில காலம் விருத்தாசலத்திலும் வசித்துவருகின்றனர்.

தனது சற்குரு ஸ்ரீ ஆறுமுக சுவாமிகளின் வேதாந்த சித்தாந்த சமரச அத்வைத உபதேசத்தை உட்கொண்டு

நிறைவுற்றவர்கள் வேத நெறி, சைவ நெறி, பக்தி நெறிகளைக் கடைப்பிடித்து அனுபவித்து வருகின்றவர்களானதால், இந்த வேதாந்த சித்தாந்த சமரச விளக்கம் என்னும் நூலை இயற்றியுள்ளார்கள்.

இதனை உணர்ந்தவர்களது பாபம் நீங்கிய சுத்தமான சத்துவ மனதில் சிவபரம்பொருள் பிரகாசிக்கும். அதற்கு சமரச புத்தியே முக்கியவுபாயம். இந்நூலை சாவதான மனதுடன் ஆராய்ந்துணரும் ஆஸ்திகர்கட்குச் சமரச புத்தி உளதாதல் திண்ணம்.

உடையார்பாளையம்
**முத்தானந்த சுவாமி,**
(தற்காலம்) சற்குரு விலாச மடம்,
**சிதம்பரம்.**

19—1—60

உ

சிவமயம்

## G. T. கிருஷ்ணமூர்த்தி அய்யர், B. A., B. L. அவர்கள்

இயற்றிய

# சிறப்புரை

---

**சி**தம்பரம் சற்குரு விலாச மடம் தவத்திரு. சிதம்பர சுவாமிகள் இயற்றிய வேதாந்த சித்தாந்த சமரச விளக்கம் என்னும் நூலின் பகுதிகளைப் படிக்கும் சிறந்த வாய்ப்பு அடியே னுக்குக் கிடைத்தது. தற்காலத்தில் வேதாந்தக் கொள்கை வேறு சித்தாந்தக் கொள்கை வேறு என்ற கருத்து சித்தாந் திகள் சிலரிடம் நிலவிவருவது யாவரும் அறிந்த விஷயம். இந் நூலில் இரண்டின் கருத்தும் ஒன்றே என்னும் உண்மையை நன்ருய் எடுத்துக்காட்டியும், வேதாந்த சித்தாந்தமும் சைவ சித்தாந்தமும் ஒரே அத்வைதக் கருத்தை வலியுறுத்துவதென் பதையும் விளக்கியிருக்கிருர்கள்.

இதற்குச் சான்ருக ஸ்ரீ திருமூல நாயனுர், ஸ்ரீ சைவசமயா சாரியர், ஸ்ரீ மெய்கண்டார், ஸ்ரீ சிவஞான வள்ளலார் முதலான சித்தாந்த ஆசிரியர்களின் நூல்களிலிருந்தும், ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரியர் முதலான வேதாந்த ஆசிரியர்களின் நூல்களி லிருந்தும் மேற்கோள்கள் எடுத்துக்காட்டியிருக்கிருர்கள்.

“ஐக்கிய புத்தியைத் தருவது ஞானம். பேத புத்தியைத் தருவது அஞ்ஞானம்” என்று ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரும் திரு வாய்மலர்ந்தருளியுள்ளார்கள். சமயத் துறையில் பல வேறுபாடு உணர்ச்சிகளைத் தூண்டும் நூல்கள் வெளிவரும் இந்நாளில், தவத்திரு. அடிகளார் அவர்களின் முயற்சி, பிளவுபட்ட இந்து சமூகத்தை ஒன்றுபடுத்திப் புத்துயிர் ஊட்டுவதாக அமைந்திருக் கின்றது.

ஸ்ரீ சங்கர பகவத் பாதாள், தாயுமானவர், வடலூர் இராம லிங்க அடிகள் முதலிய சமரச ஞானிகளின் வழிவந்த தவத்திரு. சிதம்பர சுவாமிகள், இந்த நூலின் மூலம் வேதாந்த சித்தாந்த சமரசத்தை நிலைநாட்டியிருப்பது மெய்யடியார்களால் போற்றத் தக்கது.

சைவ உலகம் அடிகளாரவர்களின் பணியால் பெறும் நன்மையைக் கருதி அவர்கட்கு நாம் என்றும் நன்றி செலுத்த கடமைப்பட்டுள்ளோம்.

*G. T. Krishnamoorthy Iyer,*
*B. A., B. L., ADVOCATE,*
***Secretary of***
***Ramakrishna Vidyalaya High School,***
*CHIDAMBARAM.*

*11—10—59*

உ
சிவமயம்

திருவையாறு
ஸ்ரீலஸ்ரீ பண்டித சித. நாராயணசாமி சுவாமிகள்
இயற்றிய

# சாற்றுக்கவி

---

வெண்பா

வேதாந்த சித்தாந்தம் மேவுசைவ சித்தாந்தம்
ஓதுமிவை யிரண்டு மொன்றேகாண் — பேதமிலை
என்றுடையார் பாலையத் தின்பச் சிதம்பரனார்
நன்றுடையார் சாதித்தார் நன்கு.

சிதம்பர மாமுனிவர் செப்புமுரை கொள்ளின்
நிதம்பரவி யீசரடி நேசித் — திதம்பெறலாம்
என்பே மிதுமறுத் திருகருத் தென்றுடின்
இன்பே தவர்க்கிங் கினி.

---

உ
சிவமயம்

திருவையாறு. 132. தெற்கு வீதி

தமிழாசிரியர்

**ஸ்ரீமான். இராம. கோவிந்தசாமி பிள்ளை**

இயற்றிய

# சாற்றுக்கவி

---

## அகவல்

உலகிடை மக்கள் உள்ளொளி பெருக்கி
இலகிடு மாறு நலமுறு பெரியர்
கண்ட நூல்களை மண்டலம் வியக்குற
மேற்கோ ளாக்கொடு விதித்தனன் ஒருநூல்
சீர்வே தாந்த சித்தாந்த சமரச
விளக்கங் கண்டனன் களக்கமிற் சிந்தை
தனக்கே யுடைய தற்பர மூர்த்தி
உடையார் பாளைய மடாலயத் தமர்ந்த
ஆறு முகமுனி நாறும லர்ப்பதம்
போற்றும் புனிதன் ஏற்றுயர் துவசன்
பூசனை யாற்றும் தேசார் செல்வன்
இதம்பெறு முரைபகர் சிதம்பர முனிவரன்
பகவற் கீதை பாருளார் போற்ற
நல்லு ரைபகர் நாவலன் ஏவரும்
வித்தக னிவனென விளம்பும் பெரியோன்
என்றே யடியேன் ஏத்துவ னினிதே.

இங்ஙனம்,

இராம. கோவிந்தசாமி பிள்ளை,
தமிழாசிரியர்.

25—3—60

உ

ஓம் தத்சத்

முருகன் துணை

# முகவுரை

ஸ்ரீ பரமசிவம் தோற்றுவித்த வேதத்தில் கர்ம காண்டம், உபாசனு காண்டம், ஞான காண்டமென மூன்று காண்டங்களுள்ளன. அவற்றில், மக்கள் மனதில் பாபம் நீங்கி மனஞ் சுத்தமாவதற்குச் சாதனமாகக் கர்ம காண்டத்தின் தாத்பரியமறிந்து அனுஷ்டிக்கவேண்டியதென்றும், சுத்தமான மனதில் காமம், குரோதம், லோபம் முதலான சலனம் நீங்கி, தனது உபாசனு தெய்வத்தினிடம் மனம் நிலைபெறுவதற்குச் சாதனமாக உபசானு காண்டத்தின் தாத்பரியமறிந்து அனுஷ்டிக்க வேண்டியதென்றும், உபாசனுமூர்த்தியினிடம் நிலைபெற்ற மனதில் ஞானுசாரியருபதேசத்தினுலும் சிவனருளினுலும் மகாவாக்கியத்தின் பொருளான சிவஞானம் உளதாவதற்குச் சாதனமாக ஞான காண்டத்திற் கூறிய பிரகாரம் சாதனம் சாத்தியங்களினிலக்கணமறிந்து அனுஷ்டிக்க வேண்டியதென்றும் விதித்துள்ளது.

இம்முறையை வேதாந்த சம்பிரதாய ஆசிரியர்கள் யாவரும் உணர்ந்து பரம்பரையாக அனுஷ்டித்துவருகின்றனர். அவர்களுக்கு வேதாகம ஸ்மிருதி புராணேதிகாசாதி சகல சாஸ்திரங்களுக்கும் அத்வைதமே தாத்பரியமென்பதும் வேதாந்த சித்தாந்த சமரசமென்பதும் கரதலாமலகமாம்.

இம்முறையை ஆராய்ந்தனுஷ்டித்தலின்றிய சித்தாந்த சாஸ்திரமாத்திரமுணர்ந்தவர்கட்கு வேதாந்த சித்தாந்த சமரசக் கருத்து விளங்கும் முறையில் சித்தாந்த பரம்பரை

யில் வந்த ஸ்ரீ தாயுமான சுவாமிகள் (வேதாந்த சித்தாந்த சமரச நந்நிலே பெற்ற வித்தக சித்தர் கணமே) என்று கூறி யுள்ளார்கள்.

வேதாந்த சித்தாந்த சமரசமென்னும் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் திருவாக்கை விளக்கஞ் செய்வதனுல் இந் நூலிற்கும் வேதாந்த சித்தாந்த சமரச விளக்கம் என்னும் பெயரிட்டு வெளிப்படுத்தியது.

இந்நூலினுட்பிரிவு, வேதாந்த சித்தாந்தமும் சைவ சித்தாந்தமும் ஒன்று எனலாதியாக மனித தேகமுள்ள போதே தன் சீவனை உய்விக்கவேண்டும் என்பதீருக 32 வகையாகத் தொகுத்துள்ளது.

ஞானுர்த்தங்களை அறிவிக்கின்ற வடமொழி, தென் மொழி சொற்களுக்குப் பொருளொன்றெனவுணர்ந்த ஆஸ்தி கர்கள் வேதாந்த சாஸ்திரத்தின் உண்மைக் கருத்தைப் பெரியோர்முகமாகக் கேட்டுணர்ந்து ரூபத்தைக் காட்டுங் கண்போல் வேதாந்த சாஸ்திரம் அகத்தில் கடவுளைக் காட்டுங் கண் என்று நிச்சயித்து, வேதாந்த சாஸ்திரத்தை மாயா வாத நூல் என்று பேசுவதும் எழுதுவதும் உய்வகைக்கு விரோதம் என்றறவே விடுத்து (வேட்கை விடு நெறி வேதாந்த மாதலால்) என்று திருமந்திரத்திற் கூறிய செய்யுளின் பொருளைச் சிந்தித்து, இதிற் கூறுகின்ற சமரசக் கருத்தை யுணர்ந்து அனுஷ்டித்துப் பிறவித் துன்பம் நீங்கிப் பேரின்ப முத்தி எய்துவார்களென்று அவ்வாஸ்திகர்களுக்கனுகூலமாக ஸ்ரீ முருகன் அருளினுலும் சற்குரு கிருபையினுலும் இந்நூல் எழுதியது.

இந்நூலும் ஆராய்ந்துணர்பவர்கட்கு மனம் அமைதிக் கேதுவாகுமாதலால் பெரியோர்கள் நீர் நீக்கி க்ஷீரங்கிர கிக்கும் அன்னம்போல் குற்றம் நீக்கி குணத்தைக் கொள் வார்களாக.

மக்கள் உண்மை நெறியுணர்ந்து மெய்ப்பொருளை அடைவதற்குச் சாதனமாகிய இந்நூலை அச்சியற்றி உலகிற்கு உதவிபுரிந்த **அட்வகேட் K. நாராயணசாமி பிள்ளை** அவர்களுக்கு சர்வார்த்த இஷ்ட சித்தியும் வைதீக ஞான விஞ்ஞான பூர்வகம் அனர்த்தி நிவர்த்தி பிர்ஹ்மானந்த பிராப்தியுமாகிய மோக்ஷ சித்தியும் விருத்தாம்பிகை வாலாம்பிகை சமேத ஸ்ரீ விருத்தாசலேஸ்வர சுவாமி திருவருளால் உளதாகுக.

சுபம். சுபம். சுபம்.

திருச்சிற்றம்பலம்.

**ஆ. சா. சிதம்பர சுவாமி,**

வேதாந்த மடம்,

வடக்கு கோட்டை வீதி,

**விருத்தாசலம்.**



வாலாம்பிகை



பழமலைநாதர்



விருத்தாம்பிகை

உ
சிவமயம்

## துதி

அருமறை யுச்சிதனில் விளங்குவதா
யனுதியா யமலன் மற்றமலை
இருவர்க்கு நிகழ்ச்சியா யந்த விறைவற்
கிதயமா யிலிங்க ரூபமதாய்
ஒருகிரி வடிவாய்க் கொடுமுடி யனந்த
முடைத்ததா யுலகெங்கு நிறைவாய்த்
திருமுது கிரியென் றொருபெயர் படைத்த
தேவை நாடொறு மிறைஞ்சி யேத்திடுவாம்.

பங்கயன் றிருமாற் கரியதோர் பரமன்
பங்கியே பெரிய நாயகியே
சங்கைக ளிலதாய்த் தடைகள் மற்றிலதாய்த்
தத்துவ மசிக்கருத் தமதை
அங்கையி னெல்லி யெனவிளங் குவதால்
அமலையே யுனக்கித யமாந்
துங்கநந் நெறியொன் றுளத்தினும் விளக்கித்
தொண்டனேன் வாக்கினு முரையாய்.

ஆண்ட குருவே கண்மணியே
யருளே நீநா னென்றுகப்
பூண்ட வடிவை யென்னுடைய
புந்திய தனுணின் றுணர்த்தி
ஈண்டப் படியே யென்னுவி
லிருந்து முரைக்க வேண்டுநீ
நீண்ட மாலு மயன்போற்றும்
நிமல விருத்த நாயகியே.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# வேதாந்த சித்தாந்த சமரச விளக்கம்

---

## தெய்வ வணக்கம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியையுள் நாடு.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினை
புந்தி யில்வைத்தடி போற்றுகின் றேனே.

கண்முதற் புலன்களந்தக் கரணங்கள் விளங்குமெத்தால்
தண்மதி யருக்கனங்கித் தாரகை விளங்குமெத்தால்
விண்முதற் பூதமியாவும் விளங்கிடு மெத்தாலந்த
வுண்மையைச்சிவப்பிரகாச வொளியினை யுளத்தில்வைப்பாம்.

காதெவனாலே கேட்குங் கண்ணெவனாலே காணும்
ஓதுநாவெவனா லுண்ணும் வுடம்பெவனாலே யோடும்
மோதுமூக்கெவனால் மோக்கும் மூச்செவனாலே யோடும்
போதெவனாற்போய் மீளும் அவனடி போற்றுகிற்பாம்.

அருவமும் உருவமாகி யனாதியாய்ப் பலவாயொன்றாய்ப்
பிரமமாய் நின்றசோதிப் பிழம்பதோர் மேனியாகிக்
கருணைகூர் முகங்களாறுங் கரங்கள்பன் னிரண்டுங்கொண்டே
ஒருதிரு முருகன்வந்தாங் குதித்தன னுலகமுய்ய.

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்
கருவா யுயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவா யருள்வாய் குகனே.

அத்துவி தத்தினேடே அபாரம் ஆனந்தமாகும்
எத்துயரமு மில்லாத வியல்பினை யுடையவஃதே
உத்தம குரவன்கூறும் வுண்மையா முரையினலும்
மெய்த்திட வுணர்வினலும் மேவுதற் குரியதாமே.

## நூல்

ஸ்ரீ தாயுமான சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய **'வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை'** என்னும் திரு வாக்கின் பொருளை விளக்கஞ்செய்வது.

1. வேதாந்த சித்தாந்தமும் சைவ சித்தாந்தமும் கருத்து ஒன்றெனல்.

வேதாந்த சாஸ்திரங்களில் எல்லாம் பிர்ஹ்ம மென்றும், பிர்ஹ்மம் ஆத்மாவென்றும், ஆத்மா பிர்ஹ்மமென்றும் கூறுகின்ற மகாவாக்கியத்தைத் திருமந்திரத்தில் எல்லாம் சிவம் என்றும், சிவம் சீவன் என்றும், சீவன் சிவம் என்றும் இவை முதலிய வாக் கியங்களால் தெளிவாய்க் கூறுகின்றது

அதில் மகாவாக்கியார்த்தத்தைக் கூறுகின்ற செய்யுள்.

2017. சீவனெனச் சிவனென்ன வேறில்லை
சீவனர் சிவனரை யறிகிலர்
சீவனர் சிவனரை யறிந்தபின்
சீவனர் சிவனயிட் டிருப்பரே.

2596. எல்லாம் அறியும் அறிவு தனைவிட்டு
எல்லாம் அறிந்தும் இலாபமங் கில்லை
எல்லாம் அறிந்த அறிவினை நானென்னில்
எல்லாம் அறிந்த இறையென லாமே.

இவை முதலிய அனேக பாடல்களினால் திருமூல நாயனார் வேதாந்த சாஸ்திரத்திற் கூறிய மகா வாக்கியார்த்தத்தை விசேஷமாக விளக்கியுள்ளனர். மேலும் திருமூல நாயனார் கூடுவிட்டு கூடு பாய்ந்த சித்தர். பதினெண் சித்தர்களிலுமொருவர். 63 நாயன்மார்களிலுமொருவர் அவர் அருளிச்செய்த திருமந்திரம் தோத்திரமாகவும் சாத்திரமாகவும் திருமுறையாகவும் உள்ளது. வேதாந்த சாத்திரத்தின் தாத்பரியமும் திருமந்திரத்தின் தாத்பரியமும் ஒன்று. அன்றியும் சீவன் சிவம் என்னும் ஐக்கியத்தை ஸ்கந்தோபநிஷத் முதலிய உபநிடதங்களில் கூறியிருப்பது காண்க.

வேதாந்த சாஸ்திரத்தில் நிர்குணமாய் சகுணமாய் அந்தர்யாமியாயுள்ளதெனக் கூறுகின்ற வாக்கியங்களுக்கு சித்தாந்த சாஸ்திரத்தில் ஒன்றாய் வேறாய் உடனாயுள்ளதெனக் கூறுகின்றன.

**சிவஞானசித்தியார்**

உலகெலா மாகி வேறா யுடனுமா யொளியா யோங்கி
அலகிலா வுயிர்கள் கன்மத் தாணையி னமர்ந்து செல்ல
தலைவனா யிவற்றின் றன்மை தனக்கெய் தலின்றித் தானே
நிலவுசீ ரமல னாகி நின்றனன் னீங்கா தெங்கும்.

இச் செய்யுளில் சகுணமும் நிர்குணமுமான சிவ பரம்பொருள் ஒன்றாய் வேறாய் உடனுமாயுள்ளதெனக் கூறியுள்ளது.

2. நான்கு மகா வாக்கியங்களுக்கும் பஞ்சாட் சரத்துக்கும் பொருள் ஒன்றென்று ஸ்ரீ. கரபாத்திர சுவாமிகள் கூறியுள்ளனர்.

கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள் பெரும்பாலும் நிர்விகற்ப சமாதியனுபவத்திலிருந்தவர்கள். பகிர்முகமாக வந்தகாலத்தில், தான் அநுபவித்த ஆனந்தானுபவத்தை முத்தி யின்பத்தில் விருப்பமுள்ள முமூட்சுக்கள் எல்லோரும் அனுபவிக்க வேணுமென்னும் பெருங்கருணையினால் நிர்விகல்ப சமாதி அப்பியாசஞ்செய்பவர்களுக்கு சாதகமாய் சுருதியுத்தி அனுபவ பிரமாணபூர்வகமாய் 'ஞான சாதக சகாயம்' என்னும் நூலியற்றியுள்ளார். அதில் 347ம் பக்கத்தில் சத்து, சித்து, ஆனந்தம், நாமம், ரூபம் என்னும் ஆத்ம பஞ்சகத்தில் நாமரூபத்தை விடுத்து, 'சிவாயநம' வென்னும் பஞ்சாட்சரத்தில் நகர மகரத்தைவிடுத்து, சத்து சித்து ஆனந்தமென்பதுவும் சிவய என்பதுவும் பொருள் ஒன்றென்பதை விளக்கி 'சிவ' என்பது பிர்ஹ்மம் எனவும் 'ய' என்பது அகம் எனவும் பொருள்கொண்டு பிர்ஹ்மோகம், அதாவது சிவோகம் என்பதாக நான்கு மகாவாக்கியங்களுக்கும் பஞ்சாட்சரத்துக்கும் பொருள் ஒன்றே. என்னுங் கருத்துகொண்டு நமது பூர்வாசாரியர்களான ஸ்ரீ சங்கரபகவத் பாதாசாரிய சுவாமி முதலியவர்களும் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலியவர்களும் பஞ்சாட்சரத்தின் பெருமையையே யெடுத்துரைக்குந் தன்மையானே இவர்கள் கருத்துக்களும் ஒன்றே, எனப் படுதலின் சங்கர பகவத்பாதர் முதலியோர் 'பஞ்சாக்ஷரத்தின் பெருமையை விளக்கஞ்செய்து மகாவாக்கிய சித்தாந்தத்தையும் நிலைநாட்டினர்.

அப்பர் சுவாமி முதலியோர் 'பஞ்சாக்ஷரத்தின் பெருமையை விளக்கஞ்செய்தனர்' அவ்வாறு மகா வாக்கிய சித்தாந்தத்தை நிலைநாட்டக் கண்டிலம் என்பராயின், ஆன்றோர்கள் திருவாய் மலர்ந்தருளிய பாமாலைகளில் இலைமறைகாய்போல் மகாவாக்கியப் பொருளை நிலைநாட்டி பரிபாகிகளுக்குத் தக்கவாறு பொருட்படுமாறு அமைத்திருப்பதினாலும், ஸ்ரீ சங்கரர் கொள்கையும் சமயாசாரியர்கள் கொள்கையுஞ் சமரசமென்பதே ஒரு தலையாம்.

இப்பெற்றியானே பஞ்சாக்ஷரமானது வேதங்களின் இறுதியில் பிரதிபாதிக்கின்ற மகாவாக்கியப் பொருளெனவே தெற்றென விளங்கும் என்று கூறியுள்ளது.

மேலும் பஞ்சாக்ஷர விளக்கம் என்னும் நூலில் பஞ்சாக்ஷரத்திற்கு மகாவாக்கியப் பொருளென்று கூறியிருப்பது காண்க.

3. மகாவாக்கியார்த்தானு சந்தானஞ் செய்கின்றவர்கட்கு முனைப்பு இன்றெனல்.

வேதாந்த ஆசிரியர்கள் கருத்தும் திருமூலர் கருத்தும் சமயாசாரியர்கள் கருத்துப் ஒன்றென்னும் தாத்பரியங்களை ஆராய்ந்தறியும் தகுதியில்லாதவர் வேதசிரசான 'தத்துவமசி' முதலிய மகாவாக்கியப் பொருளை குருமுகமாக ஆராய்ந்தறிந்தனு சந்தானஞ் செய்கின்றவர்களை நான் என்னும் முனைப்புள்ளவரென்று கூறுவர். அது யுக்தி அனுபவத்திற்கொவ்வாது மகாவாக்கியார்த்தானு சந்தானம் அதிகமா

யப்பியாசித்து அதன் மிகுதியினால் 'சிவோகம்-அகம் பிர்ஹ்மாஸ்மி' என்னும் மகாவாக்கியத்தினர்த்தம் தெளிவாக விளக்கமாகும். அதனால் எல்லாம் பிர்ஹ்மம், எல்லாம் சிவம், என்று பரிபூரண சிவசொரூபம் அனுபவத்தில் விளங்கும். நான், நீ, அவன், அவள், அது, இது முதலிய வேறுபாடுகள் எதுவுங் காணப் படாது.

ஆகலின் நான் எனும் முனைப்பு எவ்வாறிருக்கும் இராது இருக்குமெனில், தத்துவ ஆராய்ச்சியின்றிய அந்நிய நூலுணர்ந்தவர் பேசுங் கூற்று. வேதாந்த சம்பிரதாய தத்துவ ஆராய்ச்சி பூர்வகம் உண்மை யுணரவேணும்.

## ஞானவாசிஷ்டத்தில்

முனியகன்றபின் னெயினர்கோன் றனியிடமுந்தி நன்மதியாலே
அனிசநானென்ப தாரெனநாடின னடிமுதன் முடியீருந்
தனியுடம்பைநானெனல் புதுமையாஞ் சடவுடல் காண்கேனுன்
துனிசெய்யிவ்வுடல்அசேதனந்தசைமுதற்றுன்னுமாதலினன்றே

கரணமீரைந்தும் அந்நியஞ்சட மெனுங்கணக்கினு னன்றித்
திரளெனக்கில வுடன்முதனு னலன்சேடமே தெனநோக்கில்
விரவுசீவனே சேடமாமின்னதும் வேறென்றுற் றெரிகின்ற
துரவிதான வேறென்றினுற் றெரியுமீதுயர்ந்த தத்துவமாகா.

தெரிவதாகிய விதனையுமகற் றுவன்றெரிபொரு ளுறுமோ
பெரிதுசேடமாய் விகற்பமற் றமலமாம்பேரறி வியானுகும்
அரியயன்சிவ னிந்திரனந்தக னுதியாமிடந் தோறுஞ்
சுரிகொள்முத்தினுண் ணூலெனநிற்குமாற் றேன்றுமிவ்
வுயர்போதம்

என்று கூறியிருப்பது காண்க.

மேலும் பசுவாகிய சீவன் வேறொன்றினால் தெரி பவன் அதாவது சாட்சியாகிய சிவத்தினால் தெரிவிக் கப்படுகின்றவன் ஆகலின் சீவன் தனக்கு சுதந்தரமான இருப்பும் விளக்கமும் இல்லையென வுணர்கின்றான். நான் எனும் அகந்தை நசித்தவனாகின்றான் நான்எனும் முனைப்பு (அகங்காரம்) இல்லை. அன்றியும் 'சிவோகம்' பாவனை அதாவது சிவமே நான் என்பது அமுக்கிய அகங்காரம் அது பிறவிக்கேதுவான தேகமே நான் என்னும் முக்கிய அகங்காரத்தை நாசம்பண்ணும் அந்த அமுக்கிய அகங்காரமும் அப்பியாசம் மிகுதியி னால்முக்கிய அகங்காரத்தைத் தேய்த்து (குறைத்து)க் கொண்டேவந்து அத்தியந்தம் முக்கிய அகங்கார மாகிய உருவமனது ஒழிந்த (நசித்த) பின் அமுக்கிய அகங்காரமாகிய அருவமனது சுவானுபூதியில் சிவா னந்தத்தில் மூழ்கி அனுபவித்து பிறகு (பிராரப்த முடிவில்) தேகம் விழுஞ்சமயத்தில் கர்பூரதீபம்போல் தேகத்தினுள்ளே அருவமனதுஞ் சிவசொரூபத்தி லடங்கும்.

அனுசந்தானஞ் (அப்பியாசஞ்) செய்கின்றதனால் அகங்காரம் நிவர்த்தியாகும் என்பதனை

**ஞானவாசிஷ்டத்தில்**

சுத்த மித்தையே யாதலி லகங்கரந்
தொலைந்துபோம் மெய்யான
தத்து வந்தனை நினைதலாற் சித்திலே
சாற்றகங் கரமெங்கே
மெத்து நீரிலே புழுதியுங் கனலிலே
மேவுதோ யமுமுண்டோ
நித்தரூ பத்தை நினைந்திவ னானெனு
நிச்சய மறநிற்பாய்.

ஏற்றமா மகங்காரங் களிரண்டினுற் பரமமெய்தி
யூற்றமா மவற்றைநீக்கி யோரகங் கரமுமின்றி
ஆற்றலா னிற்றியென்னி லறவுயர் பரமதாகும்
தோற்றுடல் நானெனுமை சுருதிகள் சொல்லுமுத்தி

என்று கூறியிருப்பது காண்க.

4. வேதத்தின் தாத்பரியமும் ஆகமத்தின் தாத்பரியமும் ஒன்றென்று கூறுகின்ற மகான்களின் திருவாக்கு.

## திருமந்திரம்

51. வேதத்தை விட்ட அறமில்லை வேதத்தின்
ஓதத்தகும் அறம் எல்லாம் உள தர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடு பெற்றார்களே.

54. திருநெறி யாவது சித்தசித் தன்றிப்
பெருநெறி யாய பிரானை நினைந்து
குருநெறி யாஞ்சிவ மாநெறி கூடும்
ஒருநெறி ஒன்றாக வேதாந்தம் ஓதுமே

1435. வேதாந்தங் கண்டோர் பிர்மமித்தி யாதரர்
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற யோகிகள்
வேதாந்த மல்லாத சித்தாந்தங் கண்டுளோர்
சாதாரணம் அன்ன சைவரு பாயமே.

1440. சுத்த சிவனுரை தானதில் தோயாமல்
முத்தர் பதப்பொருள் முத்திவித் தாமூலம்
அத்தகை ஆன்மா அரனை அடைந்தற்றால்
சுத்த சிவமாவரே சுத்த சைவரே.

1441. நானென்றுந் தானென்றும் நாடிநான் சாரவே
தானென்று நானென்று இரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவம் நல்கலால்
தானென்று நானென்றுஞ் சாற்றகில் லேனே..

1421. கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்
முற்பத ஞான முறைமுறை நண்ணியே
சொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே.

2404. முதலாகும் வேதம் முழுதா கமமப்
பதியான ஈசன் பகர்ந்த திரண்டு
முதிதான வேதம் முறைமுறை யாலமர்ந்
ததிகாதி வேதாந்த சித்தாந்த மாமே.

2397. வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன்நூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்பு மென்றுள்ளன
நாதன் உரையை நாடில் இரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க்க பேதமே.

2441. தொம்பதம் தற்பதம் தோன்றும் அசிபதம்
நம்பிய சீவன் பரன்சிவனுய் நிற்கும்
அம்பத மேலைச் சொரூப மாவாக்கியஞ்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே.

1702. வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்
வாழ்க்கைப்புனல் மாற்றிச் சித்தாந் தத்துள்
வேட்கைவிடு வேதாந்தி பாதமே
தாழ்க்குந் தலையினேன் சற்சீட னமே.

1703. சற்குணம் வாய்மை தயாவிவேகந் தண்மை
சற்குரு பாதமே சாயைபோல் நீங்காமே
சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்தல்
அற்புதமே தோன்ற லாகுஞ் சற்சீடனே.

### தாயுமான சுவாமிகள்

*வேதமுடன் ஆகம புராணம் இதிகாசமுதல்*
*வேறுமுள கலைக ளெல்லாம்*
*மிக்காக அத்துவித துவித மார்க்கத்தையே*
*விரிவா யெடுத்து ரைக்கும்*
*ஓதரிய துவைதமே அத்துவித ஞானத்தை*
*யுண்டுபணு ஞான மாகும்*
*ஊகமனு பவவசனம் மூன் றுக்கும்*
*ஒவ்வும்ஈது பயவாதிகள் சம்மதம்.*

### ஔவையார்

*தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்*
*மூவர் தமிழும் முனிமொழியும் — கோவை*
*திருவா சகமும் திருமூலர் சொல்லும்*
*ஒருவா சகமென் றுணர்.*

### இதன் பொருள் (ஆறுமுக நாவலர் எழுதியவுரை)

தேவர் குறளும் — திருவள்ளுவ நாயனருடைய திருக்குறளும்

திருநான்மறை முடிவும் — சிறப்பு பொருந்திய நான்கு வேதங்களின் முடிவாகிய உபநிடதங்களும்

மூவர் தமிழும் — திருஞான சம்பந்த நாயனர், திருநாவுக்கரசு நாயனர், சுந்தரமூர்த்தி நாயனர் என்னுஞ் சமயகுரவர்களாகிய மூவர்களுடைய தேவாரமாகிய தமிழ் வேதமும்

முனி மொழியும் — வியாச முனிவருடைய வேதாந்த சூத்திரமும்

கோவை திருவாசகமும் — திருவாதவூரடிகளுடைய திருக்கோவையாரும் திருவாசகமும்

திருமூலர் சொல்லும் — திருமூல நாயனருடைய திருமந்திரமும்

ஒருவாசகமென்றுணர் — ஒரு பொருளையே குறிக்கும் வாக்குகளென்று அறிவாயாக.

இவை முதலிய எல்லா நூல்களுக்கும் வேதத்தின் கருத்தாகிய அத்வைதத்திலேயே தாத்பரியமென்றுணர்தற்பாலதாம்.

5. வேத நெறி சைவ நெறிகளைக் கூறுகின்ற மகான்களின் திருவாக்குகள்

**சேக்கிழார் சுவாமிகள்**

கற்பனை கடந்த சோதிக் கருணையே வுருவ மாகி
அற்புதக் கோல நீடி யருமறை சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகுந் திருச்சிற் றம்பலத் துள்நின் று
பொற்புட னடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி.

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்க
பூதபரம் பரைபொலிய புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலி திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

சைவ நெறியைப் பிரதானமாகக் கூறுகின்ற பெரிய புராணத்தில் வேத நெறியைத் தழுவிக் கூறுகின்ற செய்யுள் அனேகமுள்ளன. அன்றியும்

**திருஞானசம்பந்த சுவாமிகள்**

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு உண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருவால வாயான் திருநீறே.

**திருநாவுக்கரசு சுவாமிகள்**

அரியானை யந்தணர்தஞ் சிந்தை யானை
அருமறையி னகத்தானை யணுவை யார்க்குந்
தெரியாத தத்துவனைத் தேனைப் பாலைத்
திகழொளியைத் தேவர்கடங் கோனை மற்றைக்

*கரியானை நான்முகனைக் கனலைக் காற்றைக்*
*கனகடலை குலவரையைக் கலந்து நின்ற*
*பெரியானைப் பெரும்பற்ற புலியூ ரானைப்*
*பேசாத நாளெலாம் பிறவா நாளே.*

*வானவன்காண் வானவற்கு மேலானுன்காண்*
*வடமொழியுந் தென்தமிழு மறைகள் நான்கும்*
*ஆனவன்காண் ஆனைந்து மாடினுன்காண்*
*ஐயன்காண் கையிலன லேந்தி யாடுங்*
*கானவன்காண் கானவர்க்கருள் செய்தான்காண்*
*கருதுவரி தயத்தே கமலத் தூறுந்*
*தேனவன்காண் சென்றடையா செல்வன்ருன்காண்*
*சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன் ருனே.*

**ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்**

*ஆதியன் ஆதிரையன் அயன்மாலறி தற்கரிய*
*சோதியன் சொற்பொருளாச் சுருங்காமறை நான்கினையும்*
*ஓதியன் உம்பர்தங் கோனுலகத்தினு ளெவ்வுயிர்க்கும்*
*நீதியன் நம்பெருமான் நண்ணுமூனை நனிப்பள்ளியே.*

*" அங்கம் ஆறும் மாமறை ஒருநான்கு மாய நம்பனை "*

*" மறைக ளாயின நான்கு மற்றுள பொருள்களு மெல்லாம் "*

*" வானநாடனே வழித்துணை மருந்தே*
*மாசிலா மணியே மறைப்பொருளே "*

*" அறிவினுல் மிக்க அறுவகைச் சமயம்*
*அவ்வவர்க் கங்கே ஆரருள் புரிந்த "*

இவ்வாறு தேவாரங்களில் அனேக திருப்பாடல்கள் வேத நெறியைப் புகழ்ந்து ஓதியுள்ளார்கள்.

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தில்

" குறைவிலா நிறையே கோதிலா அமுதே
யீறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்றே "

" மூவா நான்மறை முதல்வா போற்றி "

வேதமும் வேள்வியு மாயி னர்க்கு
சோதியுமா யிருளாயி னர்க்குத்
துன்பமுமா யின்பமாயி னர்க்குப்
பாதியுமாய் முற்றுமாயி னர்க்குப்
பந்தமுமாய் வீடுமாயி னர்க்கு
ஆதியுமா யந்தமுமா யினர்க்கு
ஆடபொற்சுண் ணமிடித்து நாமே.

அன்றால நிழற்கீ ழருமறைகள் தந்தருளி
நன்றாக வானவர்கள் மாமுனிவர் நாடோறும்
நின்றார வேத்தும்நிறை புகழோன் றனைக் கொன்றை
பொன்றாது பாடிநாம் பூவல்லிக் கொய்யாமோ.

நன்றாக நால்வருக்கு நான்மறையி னுட்பொருளை
அன்றாலின் கீழிருந்தங் கறமுறைத்தான் காணேடி
அன்றாலின் கீழிருந்தங் கறமுறைத்தானா யிடினும்
கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ.

(நான்மறையினுட்பொருளை என்றது நான்கு வேதத்தின் தாத்பரியமான அத்வைத நிர்க்குண சொரூபத்தை என்பது பொருள் )

கைலாயத்தில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி சனகாதியர்களுக்கு நான்மறையின் உட்பொருள்( தாத்பரியமான )

அத்வைத நிர்க்குண சொரூபத்தை உபதேசித்தனர். நிர்க்குண சொரூபவுபதேசமே ஞான உபதேசம். இவை முதலிய திருவாக்குகளால் சைவ சமயாசாரியர் நால்வர்களும் தேவாரம் திருவாசகங்களில் வேதநெறியைப் புகழ்ந்து வியந்து ஓதியுள்ளனர்.

திருமூலர், தாயுமானவர், ஔவையார் சேக்கிழார், சைவ சமயாசாரியர் நால்வர்கள் எல்லோரும் தமிழ் உலகத்திற்கு வேத நெறி, சைவ நெறிகளைச் சமரசமாய் அனுஷ்டித்துக் காட்டியவர்கள் எனவுணர்க.

6. இறைவன் அருள் பெறுவதற்கு மக்கள் அனுஷ்டிக்கவேண்டிய மார்க்கம் நான்கு.

அவையாவன: 1. தாச மார்க்கம் — இறைவனுக்கு அடிமை என்பதை உணர்த்தும். 2. புத்திர மார்க்கம் — உடல், பொருள், ஆவி முதலிய பொருட்களெல்லாம் இறைவனது உடைமை என்பதை உணர்த்தும். 3. சக மார்க்கம் — அவன் செயல் என்பதை உணர்த்தும். 4. சன்மார்க்கம் — அவனே தான் என்னும் ஐக்கிய ஞானத்தை உணர்த்தும்.

**அப்பர் தேவாரம்**

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழ
கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

இதில் பஞ்சாட்சரமே நற்றுணையாவது என்று கூறியுள்ளது. இவை முதலிய திருவாக்குகளால் அப்பர்

தாச மார்க்கத்தில் அடிமைத் திறத்தையும் சரியை நிலையையும் விளக்கஞ்செய்தனர்.

**மாணிக்கவாசகர் திருவாசகம்**

நமச்சிவாய வாழ்க நாதன்ருள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் ருள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் ருள்வாழ்க.

அன்றே யென்ற னுவியு
முடலு முடைமை யெல்லாமும்
குன்றே யனையாய் என்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்ருே ரிடையூறு எனக்குண்டோ
எண்டோண் முக்கணெம் மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானே இதற்கு நாயகமே.

இவற்றில் குரு சிஷ்ய சம்பிரதாய முறையைக் கூறி யுள்ளது. சிஷ்யனைப் புத்திரன் என்பது ஆன்ருேர் வழக்கு; சாஸ்திரத்திலுமுள்ளது.

போற்றியோ நமச்சிவாய புயங்கனே மயங்குகின்றேன்
போற்றியோ நமச்சிவாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சிவாய புறம்பென போக்கல்கண்டாய்
போற்றியோ நமச்சிவாய சயசய போற்றிபோற்றி.

இதில், புகலிடம் — அடைக்கல ஸ்தானம் என்றும்,

அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலை புலையனேன் றனக்குச்

செம்மையே யாய சிவபத மளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே.

இதில், 'அம்மையே அப்பா' என்றும், வேறிடத்தில் 'உடையாய் உன்றன் அடைக்கலமே' என்றுங் கூறியுள்ளது இவை முதலிய திருவாக்குகளாலும், மேலும்

### திருவிளையாடல் புராணத்தில்

எழுதரு மறைகள் தேரு இறைவனை எல்லிற் கங்குல்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமே லேறத் துளும்பு கண்ணீரில் மூழ்கி
அழுதடி வடைந்த அன்பன் அடியவர்க் கடிமை செய்வாம்.

இதனாலும் ஸ்ரீ மாணிக்கவாசகர் சற்புத்திர மார்க்கத்தில், எல்லாம் இறைவனது உடைமை என்னும் உடைமைத் திறத்தையும் கிரியை நிலையையும் விளக்கஞ்செய்தனர்.

### சுந்தரர் தேவாரம்

மற்றுப்பற்றெனக்கின்றி நின்திருப் பாதமே மனம்பாவித்தேன்
பெற்றலும் பிறந்தேனினிப் பிறவாத தன்மைவந்தெய்தினேன்
கற்றவர் தொழுதேத்துஞ் சீர்க்கரை யூரிற் பாண்டிக் கொடிமுடி
நற்றவா வுனைநான் மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே.

இதில், பஞ்சாட்சர சிந்தனை என் செயலின்றி இறைவன் செயலால் நா உச்சரிக்கின்றதென்பது பொருள். இதனால் தன் செயலின்றி அவன் செயலாலுளதாகின்றதென்று கூறியுள்ளது. இவை முதலிய திருவாக்குகளால் சுந்தரர் அவன் செயல் எனும்

தன்மையையும் யோக நிலையையும் விளக்கஞ்செய்தனர்.

**சம்பந்தர் தேவாரம்**

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி
ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே.

நந்தி நாமம் நமச்சி வாயவெனும்
சந்தையாற் றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யால்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாசம் அறுக்கவல் லார்களே.

இதில், 'பந்த பாசம் அறுக்க வல்லார்களே' என்றது பஞ்சாட்சர சிந்தனையானது அவனேதான் என்னும் ஐக்கிய ஞானத்தையுண்டுபண்ணி பந்தபாசமாகிய ஆணவ மல அஞ்ஞானத்தை நாசஞ்செய்யும் என்பது பொருளாகும்.

இவை முதலிய திருவாக்குகளால் சம்பந்தர் சன்மார்க்கத் தன்மையையும் அவனேதான் என்னும் ஐக்கிய ஞானத்தையும் விளக்கஞ்செய்தனர். அவனேதான் என்பது 'சிவோகம்' என்னும் மகாவாக்கியப் பொருளாம். அன்றியும், சிவஞான போதத்தில் 'அவனேதானேயாகிய அந்நெறி' என்னும் வாக்கியமும் சிவோகம் என்னும் மகாவாக்கியப் பொருளான ஐக்கிய ஞானத்தைக் கூறியுள்ளது.

மேலும், சம்பந்தர் ஞானப் பாலுண்டு ஞானார்த்தத்தை மிகுதியாகவும், தேவாரத்தைப் பாராயணஞ் செய்பவர்கட்குப் பலன்களும் மிகுதியாகவும் ஓதி

யுள்ளதினுலும் அவனே தான் என்னும் சன்மார்க்கத்தின் சிரேஷ்டத்தன்மையினுலும் ஸ்ரீ சம்பந்த சுவாமிகளை முதன்மையாகப் போற்றுகின்றனர்.

**ஒழிவிலொடுக்கம்**

*சன்மார்க்கமே முதலாத் தாதமார்க்கத் தளவும்*
*தன்மார்க்க மானவெங்கள் சம்பந்தன் — தன்னை*
*துறவி யரசு சுகியோகி போகி*
*யறவன் மறவன் எனலாம்.*

இதில் சீவன் முத்தனை ஞானவான் இயல்பு கூறியுள்ளது.

மேலும், இவ்வெண்பாவிற்குத் திருப்போரூர் ஸ்ரீ சிதம்பர சுவாமிகளியற்றிய உரையில் சன்மார்க்கமாவது நீயே நான், நானே நீ என்பது பொருள் என்று கூறியுள்ளது. இதுவே மகாவாக்கியப் பொருளாம்.

சமயாசாரியர் நால்வரும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கின் அனுசந்தானமுணர்ந்தவர்கள் அனுபவமுள்ளவர்களாயினும் மக்கள் அவரவர் தகுதிக்குத் தக்கவாறு அறிந்தனுஷ்டித்து உய்யும்வகையாக ஒவ்வொருவர் ஒவ்வொரு மார்க்கத்தை விளக்கஞ்செய்துள்ளார்கள்.

அவற்றில், சம்பந்தர், அவனே தான் என்னும் ஐக்கிய ஞானமாகிய சன்மார்க்கத்தை விளக்கஞ் செய்தனரெனக் கொள்க.

**திருமந்திரத்தில்**

*1481. தானவ னுகித் தானந்தா மலஞ்செற்று*
*மோனமதா மொழிப்பான் முத்த ராவதும்*
*ஈனமில் ஞானுனு பூதியில் இன்பமும்*
*தானவனு யற்ற லானசன் மார்க்கமே.*

1483. *சன்மார்க்க சாதனந்தான் ஞான ஞேயமாம்*
*பின்மார்க்க சாதனம் பேதையர்க்காய் நிற்கும்*
*துன்மார்க்கம் விட்ட துரியத் துரிசற்றோர்*
*சன்மார்க்கந் தான்அவ னுகுஞ் சன்மார்க்கமே*

என்று கூறியுள்ளதினுல் சன்மார்க்கம் அவனேதான் என்னும் ஐக்கிய ஞானமாம் என்றுணர்க.

ஐக்கிய ஞானமே அத்வைத ஞானம் என்று 'பிரபுலிங்க லீலே'யில்,

வானமல்லேன் வளியல்லேன் அழல்நீரல்லேன் மண்ணல்லேன்
ஞானமல்லேன் விணயல்லேன் நானேசிவம்என்றெண்ணினேன்
ஊனமில்லா வொருசிவமே யாவன்யிவ்வா றுன்னுதான்
ஈனமெல்லா முடையவுடம் பெடுத்துச்சுழலு மெஞ்ஞான்றும்.

தூயதாகிய நெஞ்சுடை யார்க்குத்
தாமே சிவமாய்த் தோன்றுமால்
தீதாகிய நெஞ்சுடை யார்க்குத்
தெளியவ பேதம் இகலின்றி
வேதா கமங்கள் விளம்பிடினும்
விளங்காது என்றும் வேறென்னும்
வாதா லழிவர் அவர்மாயை
மயக்கம் மயங்கு மதியினர்.

இதில், அபேதம் — அத்வைதம். மாயை மயக்கம் மயங்கு மதியினர் என்றது மாயையினுல் மயங்கிய மனதுடையவர்கள் பலவிதமாய்க் கூறுவர் என்பது கருத்து. இவ்வாறு ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் கூறி யிருப்பது காண்க.

7. வேதாந்த சாஸ்திரத்திற் கூறியுள்ள அத்வைத கருத்தே சித்தாந்த சாஸ்திரக் கருத்துமாம்

என்று சிவஞான வள்ளலார் அருளிச்செய்த வள்ள லார் சாத்திரத்தில் கூறியுள்ளனர்.

சத்தும் அசத்தும் சதசத்தும் நீயல்ல
சுத்தசிவம் நீயென்று சொல்லினன் — மொய்த்தெழுந்த
கல்லாலின் கீழிருந்து கதிகாண நால்வருக்குஞ்
சொல்லாமல் சொன்ன துரை.

சைவ சித்தாந்த மெல்லாந் தானவ னகி நிற்றல்
மையறு வேத சித்தம் மற்றது நானே யென்னல்
உய்வகைக் கிரண்டு மொன்றென் ருேதி யென் னுயிர்க்கிலாடம்
செய்தசற் குரவ னீயே திருப்புலி வனத்து ளானே.

அத்துவிதந் துவிதமல்லா தெனவரிய மறையேகம்
அத்துவித மிதற்கைய மிலேயென்றே யறைந்தாலும்
பொய்த்துவித மயக்கொழியார் பூர்வவா தனையாலே
அத்துவிதமொழிப்பொருள் தான் அந்நியமாய்த் தெளிவரால்.

" அத்துவிதம் பெற ஆங்காங் கிருப்பினும்
ஆருயிர் அறிவாலறி தரப்படா "
" ஊனக் கண்ணுக் கொளியா தொளித்து
ஞானக் கண்ணின் வெளிப்படு நாதன் "

நிரந்தர பஞ்சாட்சர சிந்தனையினலும் சிவமே நான் என்னும் ஐக்கியானுபவ அத்வைத ஞானம் பெறலாம் என்று கூறுகின்ருர்.

" அஃதும் அறிதே யாகில் அஞ்செழுத்தின்
உண்மைப் பகுதி யறிந்துள் ளேபடி "

(உண்மைப் பகுதியறிந்து — சகள நிஷ்கள சொரூப இலட்சணம் அத்வைத ஞானசாரியர் முகமாக வுணர்ந்து சிந்தனைசெய்.)

மந்திர மாவதும் அஞ்செழுத்தே யந்த மந்தி ரத்தின்
ஐந்துபொ ருளையுங் காட்டியி ரண்டின் வழிய டைத்து
முந்துமி ரண்டின் வழியைத் திறந்துஉயர் முத்தி தந்தான்
கந்தன் கணபதிக் கப்பன் கச்சியே கம்பன் ருனே.

தேவே திருஞான சம்பந்த தேசிகனே
ஒலியெழுத் தஞ்சினையும் ஓதாய்கொள் — ஆவியார்
பின்னிரண்டையுந் தள்ளிப் பிரியாத வானந்த
முன்னிரண்டையுங் காணுதலே முத்தி.

(அத்வைத ஞானுனுபவம் உளதாகும் நூல்களைக் கூறல்.)

எந்தை சனகாதியருக் கீந்த நூல் முற்காலம்
நந்திக் குரைத்த ஞான நூல் — செந்துவர்வாய்
தேவிக் குரைத்தநூல் சீராமற் கோதிய நூல்
ஆவிக் குரிய நூலாம்.

பல்கலை யாகமத்தால் பகர்கீதை பதினெட்டால்
நல்வினையால் கருமத்தால் நான்மறையால் ஞானத்தால்
சொல்லூகத் தான்மறையாற் றுணிவால்இல் துறந்தோரால்
நல்லோரால் நான்பார்க்கில் நானேயப் பரப்பிரமம்.

மன்னுமா மறையின் சென்னி வாக்கிய முடிவுங் கண்டேன்
அன்னிய பாச மான ஆண வாதியை யுங்கண்டேன்
என்னை யுங்கண் டேன்என் னிதயதா மரையின் மேய
நின்னையுங் கண்டேன் எந்தாய் நீதந்த ஞானக் கண்ணுல்.

ஐம்புல னடக்க லாலும் அறிவினை யறித லாலும்
இன்ப துன்பங்க ளெல்லாம் இயல்பென வொறுத்த லாலும்
செம்பொரு ளறைத லாலுஞ் சிவோகம் பாவித்த லாலும்
நம்பனை யகத்து ணர்ந்த ஞானியென் றறைய லாமே.

(அத்வைதத்தை நம்பாத சாதாரண சைவர்களுக்கறிவுறுத்தல்.)

ஒன்ருயுல கணைத்து மாஞரென் றப்பமுனி
பொன்ரு மொழியாற் புகன்றிருக்க — குன்ருத
முத்தியினும் மும்முதலும் உண்டென் றுரைத்தலெவன்
பித்தமுறுஞ் சைவாநீ பேசு.

சித்ததே வடிவதாகிச் சீவன் சீவன் முத்தி தன்னில்
ஒத்துற வொருவன் காட்ட வொருவன் கண்டிருப்ப தென்ருய்
அத்தகு மவர்கட் கப்போ துடலுயிர் கரணம் வேண்டும்
பித்துரு சைவா முத்திப் பேரின்பத் திரண்டுண் டாமோ.

ஓசை ஒலியெலா மாஞய்நீ யென்றபினர்
பேச விரண்டுண்டோ பேய்சைவா — ஆசை
யெல்லாம் அற்றவிடம் முத்தி நிலேயோ
அஃதெல்லா முற்றவிடம் முத்திநிலேயோ.

எல்லாஞ் சிவனென் றெடுத்துரைத்த வாகீசர்
சொல்லாற் றெரியாத துன்மதியோய் — பல்கலேயும்
நாத்தழும்ப ஆகமமும் நான்மறையும் மற்றனைத்தும்
பார்த்ததனுல் என்ன பயன்.

அஞ்ஞான நீக்கத்தி லாருயிரே சிவமானமையால்
மெய்ஞ்ஞானி யென்பதெவர்க் குஞ்சரி யொக்கும்
வேறென் றுன்னிப்
பொய்ஞ்ஞானம் பேசும்புருடர்க் குன்பாதப் புணை கிடையா
எஞ்ஞான்ற வர்க்கருள்செய் குவையோகச் சியேகம்பனே.

கண்ணொளி கண்ணே கதிரொளி கதிரே
கண்ணு காதே கதிரும் கண்ணுங் கதிரா காதே
கலப்பின் வைப்பே
அத்துவிதம் ஒன்றேயாம் ஆங்கிரண் டின்மையெனில்
அத்துவித மன்ருே வது.

அத்துவிதம் — ஒன்று : ஏகம். துவைதம் — இரண்டு :
பேதம்

கண் இரவி யின்றிக் கலந்தறியா தொன்றையும்
கண்ணுங் கதிரும் ஒன்ருே காண். (ஒன்றல்ல)

அகண்டம், அசங்கம், அவிகாரம், அசலம், அமலம் என்னும் பதங்களுக்குப் பொருள் கொள்வதுபோல அத்வைதமென்னும் பதத்திற்கும் பொருளென்றுணர்க.

இவ்வாருக வேதாந்த சித்தாந்த சமரசக் கருத்து விளங்கச் சிவஞான வள்ளலார் கூறியுள்ளார்

8. ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டர் புராணத்தின் வரலாறும் திருத்தொண்டர்கள் வேதநெறி, சைவநெறி, பக்திநெறிகளைச் சமரசமாக அனுஷ்டித்தவர்களென்றுங் கூறுதல்.

ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் சிதம்பரத்தில் ஸ்ரீ நடராஜமூர்த்தி சந்நிதானத்தில் நின்று தரிசனஞ்செய்யும் போது (உலகெலாம்) என்று அசரீரி வாக்கு உண்டாயிற்று. அதன்மூலம் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனர் அருளிச்செய்த திருத்தொண்ட தொகைக்கு வியாக்கியானமாய் பெரியபுராணம் அருளிச்செய்தனர்.

ஸ்ரீ நடராஜமூர்த்தி அருளாலுண்டான அசரீரி வாக்கை முதலடியாக வைத்து,

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

என்று ஸ்ரீ நடராஜ மூர்த்தியை நிர்க்குணமாகவும் சகுணமாகவும் சகளமாகவுந் துதிசெய்தனர்.

நிர்க்குண சொரூப (சிவபரம்பொருளின்) இலட்சணங்களைப் பிரதானமாகக் கூறுவதை வேதநெறியென்றும், சகுண வடிவ (சிவபெருமான்)இலட்சணங்களைப் பிரதானமாகக் கூறுவதை சைவநெறியென்றும் சகளமாகிய மூர்த்தியினிடத்து மனம், வாக்கு, காயங்களால் தியானம், தோத்திரம், பூஜை முதலியவற்றைச் செய்கின்ற. பக்தியைப் பிரதானமாகக் கூறுவதைப் பக்திநெறியென்றுங் கூறப்படும்.

இவ்விதமாகவே சைவ சமயாசாரியர் நால்வரும் தேவாரம் திருவாசகங்களில் இறைவனை நிர்க்குணமாகவும் சகுணமாகவும், சகளமாகவும் அதனதன் இலட்சணங்களைப் புகழ்ந்து வியந்து ஓதியுள்ளார்கள்.

இம்மூன்று நெறிகளையுமுணர்ந்து வேதாந்த சித்தாந்த சமரசமாய் ஒழுகிய நாயன்மார்களின் (திருத்தொண்டர்களின்) வரலாறுகளைப் பெரியபுராணங் கூறியுள்ளது.

இக்கருத்தை திருவிளையாடல் புராணத்தில் ஸ்ரீ பரஞ்சோதி முனிவர் கூறியுள்ளனர்.

தந்தைதாளொடும் பிறவித்தாளெறிந்து
நிருத்த ரிருதாளைச் சேர்ந்த
மைந்தர்தாள் வேதநெறி சைவநெறி
பத்திநெறி வழாது வாய்மை
சிந்தைதான ரனடிக்கே செலுத்தினராய்ச்
சிவானுபவச் செல்வ ராகி
பந்தமாந் தொடக்கறுத்தத் திருத்தொண்டர்
தாள்பரவிப் பணிதல் செய்வாம்.

இவ்வாறு சித்தாந்த சம்பிரதாய பூர்வாசிரியர்களெல்லோரும் மேற்கூறிய மூன்று நெறிகளையுஞ் சமரசமாயனுஷ்டித்து முத்தியின்பமெய்தினுர்கள் என்பது அவர்களியற்றிய நூல்களே சான்ரும்.

9. ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள் அருளிச்செய்த் பிரஸ்தானத்திரயத்தின் வரலாறும் வேதாந்த சம்பிரதாய ஆசிரியர்களெல்லோரும் வேத நெறி சைவநெறி பத்திநெறிகளேச் சமரசமாக அனுஷ்டித்தவர்களென்றுங் கூறுதல்.

ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள் காசியில் ஸ்ரீ விஸ்வநாத சுவாமி சந்நிதானத்தில் நின்று தரிசனஞ்செய்யும்போது (சிவம் சத்தியம் அத்வைதம்) என்று அசரீரி வாக்கு உண்டாயிற்று. அவ்வாக்கியத்திற்குப் பொருள், நிர்க்குண பிர்ஹமம் (சிவபரம் பொருள்). ஸ்ரீ விஸ்வநாதர் அருளாலுண்டான சிவம் சத்தியம் அத்வைதம் என்னும் அசரீரி வாக்கியப் பொருளாகிய சிவபரம்பொருளின் ஞானம். ஞானதிகாரியான முமூட்சுக்களுக்குளதாகும் முறையில் ஸ்ரீ வியாசமுனிவர் அருளிச்செய்த வேதாந்த(பிர்ஹ்ம) சூத்திரத்திற்கு சிஞ்ஞாசுக்குள் விசாரிக்கவேண்டிய பிரக்கிரியைகள் முழுவதும் அமைந்துள்ள வியாக்கியானமாய் பாஷியம் அருளிச்செய்தனர். இதுவே வேதாந்த சாஸ்திரங்களுக்கெல்லாம் மூலம். மேலும், உபநிஷத் பாஷியம், பகவத் கீதா பாஷியம் அருளிச்செய்தனர். இம்மூன்று பாஷியங்களேயும் ஒருமித்து பிரஸ்தானத்திரயமென்பர். மேலும், பெருங்கருணையினுல் மந்த முமூட்சுகளுக்கும் அத்வைத நிச்சயம் தெளிவாக விளங்கவும் சுலபமாய் சிவபரம்பொரு

ளின் ஞானம் உளதாதம் முறையில் ஆத்மபோதம் அபரோக்ஷானுபூதி, விவேக சூடாமணி, அத்வைதானு பூதி, வாக்கிய விருத்தி, தத்துவோபதேசம் முதலிய அநேக வேதாந்த சாஸ்திரங்களும், விவேக வைராக்கியாதி சாதனமுள்ளவர்கட்கு நிர்க்குண சொரூப இலட்சணம் விளங்க பிர்ஹமஸ்தோத்திரம், பிர்ஹ்மநாமாவலி, பஞ்சகம், ஷட்கம், அஷ்டகம், தசகம் முதலிய வேதாந்த தோத்திரங்களும், சகுணஸ்வரூப சிவபெருமான், பார்வதி, விஷ்ணு, லக்ஷ்மி முதலானவர்களின் ஸ்தோத்திரங்களும், பஞ்சாக்ஷர மகிமை விளங்க மந்திர ஸ்தோத்திரங்களும், அனேக க்ஷேத்திரங்களில் சகளரூபமாயமர்ந்துள்ள தெய்வங்களின்மீது நிர்க்குண சகுண இலட்சணங்கள் விளங்கும்படி வர்ணிக்கின்ற ஸ்தோத்திரங்களும் இவ்வாறு அனேக ஸ்தோத்திரங்கள் அருளிச்செய்தனர். ஸ்தோத்திரங்களைப் பிருகஸ்தோத்திர ரத்னுகரம் முதலான நூல்களிற் காண்க.

மேலும், மக்கள் வேதநெறி, சைவநெறி, பக்தி நெறிகளைக் கிரமமாக அனுஷ்டித்து முத்தியின்பம் பெறும்பொருட்டே ஷண்மதஸ்தாபனமும் அத்வைத ஸ்தாபனமும் செய்தார்கள்.

சிவம், சக்தி, விஷ்ணு, கணபதி, கௌமாரம் (சுப்பிரமணியர்), சௌரம் (சூரியன்) இவை அவரவர்கட்கு இஷ்டமாய் உபாசிக்கவேண்டிய தெய்வங்கள் அந்தந்த தெய்வ உபாசகர்கட்கும் பொதுவாகவுள்ளது அத்வைதம்.

அன்றியும், அவர்கள் தானும் மேற்கூறிய மூன்று நெறியின்படி சைவசமயாசார அனுஷ்டானம் சிவ

லிங்காதி மூர்த்திகளின் பூஜை, சகுண தியானம், நிர்க் குண ஞான பூஜை முதலியன அனுஷ்டித்து உலகத்தில் குரு சிஷ்ய சம்பிரதாயம் பரம்பரையாக விருத்தி யாகும்படி ஆசீர்வாதம்செய்து உலக குருவாகச் சிறப் புற்று விளங்கினுர்கள்.

ஆதி ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமி களால் ஸ்தாபிக்கப்பட்ட மடங்களில் குரு சிஷ்ய பரம் பரையாக மேற்காட்டிய மூன்று நெறிகளை அனுஷ் டித்து சிறந்த ஒழுக்கமுள்ளவர்களாக அத்வைத ஞான முள்ளவர்களாய் முத்தியின்பமெய்தினுர்கள். அவரவ ரியற்றிய நூற்களினுலும் பரம்பரை வரலாறு சரித் திரத்தினுலும் அறியலாம்.

அவற்றிற்குச் சான்ருகத் தற்காலம் காஞ்சி காம கோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள் சமதமாதிகுணகணுலங்கிருதர்களாய் அவர் கள் அனுஷ்டிக்கின்ற சைவசமயாசாரவனுஷ்டான சீலங்களையும் அவர்கள் செய்துவருகின்ற சிவலிங்க மூர்த்தியாதிகளின் பூஜை முதலான நியமங்களையும் தரிசித்தவர்களுக்கு அன்பும் பரவசமான பக்தியும் ஆஸ்திகர்கட்கு உளதாகுமென்பது பிரத்தியக்ஷமாகக் காணலாம்.

வாமமே யாதிமார்க்கம் மாலொடு துன்பமீயுங்
காமமே முதலாந்துஷ்டக் களங்கினை யொழித்தார்க்கேமெய்த்
தாமமாமெனச் சந்நியாசந் தாங்கிய பரமவஞ்ச
நாமமார் சங்கரன்றன் நறுமலர்ப் பாதம் போற்றி

என்று அன்பர்கள் துதித்து வணங்குகின்றனர்.

இவ்வாறுள்ள வேதாந்த ஆசிரியர்களின் அத் வைத நிச்சயத்தைப் பின்பற்றிய நிவர்த்தி மார்க்கத்

தில் (சந்நியாச ஆஸ்ரமத்தில்) உள்ள குருசிஷ்ய சம்பிரதாயங்களும், மற்றும் பிரவிருத்தி மார்க்கத்திலுள்ள (கிரகஸ்தாஸ்ரமத்தில்) உள்ள அன்பர்களும், சைவசமயாசாரவனுஷ்டானத்தில் சிறந்தவர்களாய் மேற்கூறிய மூன்று நெறிகளையும் சமரசமாய் அனுஷ்டித்துவருகின்றனர் என்பது சித்தம்.

10. வேதாந்த சாஸ்திர சம்பிரதாயங்களின் கருத்தறியாதவருக்கறிவுறுத்தல் — உலகத்தில் பரம்பரையாக அனுஷ்டித்துவருகின்ற வேதாந்த ஆசிரியர்களின் சீலம், அனுசந்தானம், அனுபவம் முதலியவற்றைத் தெரிந்துகொள்ளாமல், தன் சீவனை உய்விக்குஞ் சாதனமின்னது சாத்தியமின்னதென்பது குருவின்மூலமாயறியாமலும், பக்தி ஞானத்தைக் கூறுகின்ற வடமொழி தென்மொழிச் சொற்களுக்குப் பொருள் ஒன்றென்றுணராமலும் மயங்கி முரணுகச் சிலர் பேசுகின்றனர். அதனை விடுத்து, வேதாந்த சித்தாந்த சமரச அனுசந்தானமுள்ளவர்களைச் சார்ந்து தானும் சமரச அனுஷ்டானத்தைப் பின்பற்றி இறைவனருள்பெற்றுய்வார்களாக.

அன்றியும், வடமொழி தென்மொழி இரு மொழிகளையும் முன்னுள்ள பூர்வாசிரியர்கள் தழுவிய முறையே தழுவி அனுஷ்டிப்பது சிரேயசைத்தரும். தமிழ் உலகத்திலிருந்த சித்தாந்த பூர்வாசிரியர்கள் வடமொழியைத் தழுவியே அனுஷ்டித்துவந்தனர்.

திருவாவடுதுறை ஸ்ரீ சிவஞான யோகி இயற்றிய 'காஞ்சி புராண'த்தில்,

வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாய்ப்
தொடர்புடைய தென்மொழியை யுலகெலாந் தொழுதேத்துங்
குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகரெனில்
கடல்வரைப்பிலி தன்பெருமை யாவரே கணித்தறிவார்.

இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவ ரியல்வாய்ப்ப
விருமொழியும் வழியடுத்தார் முனிவேந்த ரிசைப்பரப்பும்
இருமொழியும் ஆன்றவரே தழீஇனு ரென்ருலிங்
கிருமொழியும் நிகரென்னு மிதற்கைய முளதேயோ.

சமஸ்கிருதம், தமிழ் இரு பாஷைக்கும் முதலாசிரியர் சிவபெருமான். வடமொழிக்கு இலக்கணம் பாணினி முனிவருக்கும் தென்மொழிக்கு இலக்கணம் அகஸ்திய முனிவருக்கும் சிவபெருமான் உபதேசித்தருளினர். அம்முனிவரிருவரும் முறையே வடமொழியில் பாணினீயம், தென்மொழியில் அகத்தியம் என்னும் இலக்கண நூலே அருளிச்செய்தனர். இருமொழிகளிலும் இலக்கண நூல்களில் இவையே முதல் நூல்களாம். அன்றியும், இரு மொழிகளையும் தழுவிய மகான்களின் திருவாக்கு

"வடமொழியுந் தென்மொழியும் ஆனுன் கண்டாய்"

இது முதலியன அப்பர் திருவாக்கு.

"ஆரியத்தோடு செந்தமிழ்ச்சுவை அறிகிலார்"

என்றும்,

"வைதீகத்தின் வழியொழு காதவர்
கைதவமுடைக் காரமண் டேரரை"

என்றும்.

"மறைவழக்க மில்லாத மாபாவிகள்"

இவை முதலிய சம்பந்தர் வாக்கு.

மறைகள் நிந்தனை சைவநிந் தனைபொரு மனமும்
தறுகணும் புலன்களுக் கேவல் செய்யுருச் சதுரும்
பிறவி தீதெனுப் பேதையர் தம்மொடு பிணக்கும்
உறுதி நல்லறஞ் செய்பவர் தங்களோ டுறவும்.

இச்செய்யுளில் வேதநெறி, சைவநெறி நிந்தை கூடாதென்று திருநந்திதேவர் கூறியுள்ளார். இவ்வாறு இரு மொழியையுந் தழுவிக் கூறியுள்ள மகான்களின் கருத்துக்களை ஆராய்ந்துணராமலும் சமய குரவர் நால்வர் போன வழியே மனஞ்செல்லவேணுமென்னும் நீதியை மறந்தும் சாதாரண சைவர்களில் சிலர் வடமொழி கூடாது, வேதாந்த நூல்களைப் பார்க்கவும் கேட்கவுங் கூடாது என்று வெறுப்பினுல் மறைகளையும், வேதாந்த ஆசிரியர்களையும், அப்பியாசிகளையும் நிந்தை முதலியன செய்கின்றனர்.

(திருமந்திரத்தில்)

409. அப்பரி செண்பத்து நான்குநா ருயிரம்
மெய்ப்பரி செய்தி விரிந்துயி ராய்நிற்கும்
பொய்ப்பரி செய்திப் புகலு மனிதர்கட்கு
இப்பரி சேயிருள் மூடிநின் ருரே.

என்று கூறியுள்ளது. ஆகலின் மயங்கிய புத்தியினுலே நிந்திப்பதை அறவே நீக்கி, சுத்த சைவம்பற்றி வேதாந்த சித்தாந்த சமரசமாய் அனுஷ்டித்து 'சுத்த சிவமாவரே 'சுத்த சைவரே' என்னும் திருமூலர் வாக்குப்படி ஆனந்தசொரூப சிவத்தையடையவேணுமென்பது கருத்து.

11. சுத்த சைவர்களுக்கு வேதாந்த சாஸ்திரங்களின் தாத்பரியம் அத்வைத சிவபரம்பொருள் என்று விளக்கஞ்செய்தல்.

ஸ்ரீ வசிஷ்டர் ஸ்ரீ ராமருக்கு அத்வைத சிவபரம் பொருளையுபதேசித்தல்.

அத்தமி யாதசோதி யருக்கனு யளவிலாதாய்
மெத்திய பிணியிலாதாய் மேவரும் பிறப்பிலாதாய்
எத்தலங் களினுமென்று மியாவுமா யாவுஞ்செய்து
முத்தியு மாகியோங்கு முதற்பரம் பொருளொன்றுண்டு.

அயனெடுமால் சங்கரனுஞ் சதாசிவனு
மிந்திரனு மருக்கன் ருனும்
வியனிலுப சாந்தராம் வேலையினிலு
பாதியெலாம் விட்டு நீங்கிப்
பயனில்சக மென்கின்ற பற்றகன்று
சின்மயமாம் பரம ரூபம்
உயர்விகற்ப மிலாவடிவா யெங்குநிறை
சிவமாகி யொன்ருய் நிற்கும்

எனதீதென்னு மறிவுதனையிடற்
கற்பனை யென்றுரை செய்வர்
கநமா மறிவின் பாவனையாற்
காண்பதெல் லாங்கை யகலில்
அநகா திபனே கற்பனைக
ளற்றதென் ருருயர் நல்லோர்
மநமா நினைவே சங்கற்பம்
மனத்தினினை வற்றது சிவமே.

எனக்கீ தென்னு முணர்வுடமை
யிடர்விட் டகலா துணர்வின்மை
அனர்த்தமில் லாவீ டளிக்குமிங்
காசை யேதது செய்வாய்
சனிப்பில் சிவம்யெங் கணுமுளது
சாந்தஞ் சுபஞ்சித் துருவென்னும்
கனத்த வந்தவொரு நினைவே
கருமத் தியாகம் ராகவனே.

இவை முதலியன ஞானவாசிஷ்டத்திற் கூறியிருப்பது காண்க.

ஸ்ரீ பகவான் சிவபரம்பொருளை உபதேசித்தல்

யாதொன்றை மறைதெரிந்தோர் அழியாதென் றெடுத்துரைப்பார்
யாதொன்றை அவா அறுத்த யோகிகடா மெய்திடுவார்
யாதொன்றை யுறநினைந்தோர் காமமுதலிய விழப்பர்
யாதொன்றப் பரம்பொருளாம் அதைச்சுருங்க வியம்புவன்கேள்.

அஞ்சுபுலன் வழியவை யடைத்தய லுருதே
நெஞ்சுதனை யிதய கமலத்திடை நிறுத்தி
யெஞ்சுதலி லுயிர்வளியை யுச்சியினி லேற்றி
யுஞ்சுபுகு நெறியிதென யோகுட னிருந்தே.

ஓதலினி யற்கையினே டோமெனு மெழுத்தை
வாய்தனி லுரைக்க மனமானது தனித்தே
மேதகுமெனைத் தெளிய வாவிதனை விட்டோர்
வீதலி னியற்கை யெனையே யடைவர் மிக்கோய்.

இகமே நிகழும் புலன்விளைந்த யின்ப மெல்லா மறவிகந்துள்
அகமே விளையும் பேரின்ப மடைந்தார்க் கென்றும்அழியாதாம்
புகமேய் கின்ற புலன்பொறிகள் புணர்ந்த வின்பம் போமென்றும்
தகமே லிடரா மெனவுமவை தக்கோர் என்றுஞ் சாராரால்.

தேறுநெஞ் சினனுய்த் தன்செ யலலால்
வேறுகண் டறியா மெய்ய றிவினல்
ஊறி லிந்த வுடம்புடன் வேறுபெற்று
ஏறுநின் றவனே யின்ப மெய்துவான்.

கெடுகின்ற பூதங்க டோறுங் கெடாதே
வடுவின்றி நின்றம றைப்பொரு டன்னை
நடுவென்று கண்டவன் நல்லன வெல்லாம்
கடுகின்று ணையொழி யாவகை கண்டான்.

ஒத்தெங் குமாய ஒருமைப் பொருளினை
அத்தன் மையினுல் அறியு மவனே
செத்தும் பிறந்துந் திரியா வகைதனை
மெய்த்தன் மையிலே புகவிடு கின்ருன்.

உணர்வு அவிகாரி யென்றும் வினையெலா முடம்பி னேடே
புணர்வன வென்றுங் கண்டான் பொய்யிலா மெய்யைக் கண்டான்
இணர்மலர் முடியா யெல்லா வினைகளுஞ் செயினு மான்மா
குணமிலி யாத லாலே அவற்ருெடுங் கூடி நில்லான்.

உன்னிய வான மெங்கும் ஒழிவற நிறைந்த தேனும்
தன்னுடை நுண்மை யாலே பிறவொடுஞ் சார்த லுண்டோ
பன்னிய விதுபோ லெங்கும் பரந்துள னெனினு மங்கு
மன்னிய வீச னந்த வுடம்பொடு மருவ மாட்டான்.

பொறிக ளுண்ணின் றவற்றின் புணர்ப்பெலாம்
அறிய வாட்டினன் போலாக் கைகடோறும்
மறைவி னின்றுதன் மாயையி னுல்வினைக்
குறிகள் செய்விப்பன் ஈசனென்றே கொள்வாய்.

இவை முதலியன பகவற் கீதையிற் கூறியிருப்பது காண்க.

கைவல்லிய நவநீதத்தில் சிவபரம்பொருளைக் கூறுகின்ற சில செய்யுள்.

சீவனது நிஜ சொரூபம் சாட்சியெனல்.

தூலசூட் சுமவஞ் ஞானந் தோன்று மூன்றவத்தை தாமுங்
காலமோர் மூன்றுஞ் சன்மக் கடலெழுங் கல்லோ லங்கள்
போலவே வந்து வந்து போனவெத் தனையென் பேன்நான்
ஆலமர் கடவு ளாணே யவைக்கெலாஞ் சாட்சி நீயே.

சீவ ஈஸ்வர சப்தத்தில் இலட்சியார்த்தமின்னது, வாச்சியார்த்தம் இன்னதெனல்.

இந்த நீதுவம் பதத்திலி லட்சியப் பொருளா மென்றும்
பந்தமில் பிரமமே தத்பதந் தனிலி லட்சி யார்த்தம்
அந்தமாஞ் சீவன் ஈசன் அவர்களே வாக்கி யார்த்தம்
சந்ததம் பேத மாவார் தமக்கு ஐக்கியங் கூடாதே.

சீவன் ஈஸ்வரன் வாச்சியார்த்தத்தில் பேத முள்ளவரெனல்.

பேதமானது வுங்கேளாய் பெயராலும் இடங்களாலும்
ஓதருமு பாதியாலும் உடலாலும் உணர்வினுலும்
பாதலம்வி சும்புபோல பலதூரம் அகன்றுநிற்பர்
ஆதலாலிவர்க் கெந்நாளும் ஐக்கியமென் பதுகூடாதே.

சீவன் ஈஸ்வரன் இலட்சியார்த்தத்தில் ஐக்கியம் (அபேதம்) எனல்.

தத்துவமெனும் பதங்கள் பிரமமாய்ச் சாட்சியான
வத்துவைவிடா மல்பேத வாக்கியார்த்தத் தைவிட்டு
நித்தமும்அது நீயாகும் நீஅது வாகுமென்னும்
அர்த்தமும் அகண்டமென்றே அகிபதம்ஐக் கியங்காட்டும்.

கடநீரின் மேகநீரின் ககண்டவானிரண் டும்பொய்யே
குடவானும் பெரியவானுங் கூடியொன்ரு மெப்போதும்
இடமான பிரமஞ்சாட்சி யிரண்டும்எப் போதும்ஏகம்
திடமாக சுவானுபூதி சிவோகமென் றிருந்திடாயே.

தஞ்சமாங்குரு வுஞ்சொன்ன தத்துவ வழிதப்பாமல்
பஞ்சகோச முங்கடந்து பாழையுந் தள்ளியுள்ளில்
கொஞ்சமாமிருப் பும்விட்டுக் கூடஸ்தன் பிரமமென்னும்
நெஞ்சமும் நழுவியொன்ருய் நின்றபூரணத் தைக்கண்டான்.

12. சிவஞானம் பெறுவதற்கு ஞானபூமிகளே உபாயம் எனல்.

ஞானவாசிஷ்டம்

உளமொடுங்கு முபாயமே யோக மாகும்
உணர்வுறுபூ மிகளிந்த வுபாய மாகும்
வளமிகுமிப்பூ மிகளா லன்றி யிந்த
மாதேவ பெரியபதம் மருவ லாகா
அளவறநீ நான்ருன் வேருென் றுமின்றி
அபேதமாய நாமய மாய மூலமாகி
கிளர்சுகமாய்ச் சாந்தமா யறிவா யொன்ருய்
கேடின்றிப் பெயரின்றிக் கீழ்மே லின்றி.

(மகாதேவபதம், பிர்ஹ்மபதம், சிவபதம், திருவடி என்னும் சொற்களுக்குப் பொருள் ஒன்றே.

கைவல்லிய நவநீதத்தில் ஞானபூமிகளைக் கூறல்.

துர்ச்சங்க நிவர்த்திவந்து சிவஞானம்
விரும்புவது சுபேச்சை யாகும்
நற்சங்க மொழிவினவி ஞான நூல்
பழகல்விசா ரணையாம் நம்பி
முற்சங்க வீடணைகள் விடல்தநுமா
னசியிந்த மூன்றி னலும்
சற்சங்க மனதிலுண்மை யறிவுதித்தல்
சத்துவா பத்தி தானே.

தத்துவத்தின் மனமுறைத்து மித்தையெலா
மறத்தலசம் சத்தி யாகும்
அத்துவிதா னந்தம்வரும் திரிபுடிபோம்
பதார்த்தாபா வனைய தாகும்
வத்துநிலை யிருந்தபடி யிருந்தமவுன
சுபாவந் துரிய மாகும்
இத்துரிய பூமியைமுன் துரியாதீதப்
பதமென் றதுவுங் கேளாய்.

முன்னிலங்க ளேறிய மூவருமப்
 பியாசிகளா முத்த ரல்லர்
பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டன்எனுஞ்
 சீவன்முத்தர் பேத மாகும்
சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே
 பிரமவித்தாந் தூய முத்தர்
இன்னமுமப் பூமிகளின் பெருமைதனை
 நீயறிய யான்சொல் வேனே.

(ஞான பூமிகளின் அப்பியாசமுள்ளவர்கட்கு சிவனருளால் சிவஞானம் உளதாகும். துரியத்தில் சிவஞானுபவமும் துரியாதீதத்தில் சிவானந்தானுபவமும் மௌன சுவாபமும் உளதாம்.)

(மேலும் சாதனங்களைக் கூறல்.)

ஒன்றுகேள் மகனே புமான்மு யற்சியா
 லுறைத்து மானிடர்க் கீசன்
நன்று செய்யவே காட்டிய நூல்வழி
 நடந்து நல்லவர் பின்னே
சென்று துட்டவா தனை விட்டு விவேகியாய்
 செனித்த மாயையைத் தள்ளி
நின்று ஞானத்தை யடைந்தவர் பவங்கள்
 போம்நிச் சயமிது தானே

என்று கூறியிருப்பது காண்க.

ரிபுகீதையில்

பூதியினு லங்கமெலா நன்ருய்ப் பூசி
 பொருவில்திரி புண்டரமு மணிந்து கொண்டு
மாதவனே நியமமுட னுருத்தி ராக்க
 மாலைகளுஞ் சிரமுதலிற் றரித்துக் கொண்டிங்

கோதியிடு முருத்திரபஞ் சாட்ச ராதி
வுத்தமமாம் மந்திரமுஞ் செபித்துக் கொண்டு
நீதியுட னிகழுமகா லிங்கத் தின்கண்
ணித்தியமாம் அருச்சனையுஞ் செய்ய வேண்டும்.

இவ்வாறு வேதாந்த சாஸ்திரங்களிற் கூறுகின்ற ஞான மார்க்கம், பக்தி மார்க்கங்களையுணர்ந்தவன் சைவசமயாசாரத்தையனுஷ்டிப்பவனும் விபூதி தரித்தல், ருத்திராக்ஷமணிதல், குருமுகமாகக் கேட்டு பஞ் சாட்சராதி மந்திரம் ஜபஞ்செய்தல், உபாசனமூர்த்தி தியானம் பூஜை முதலிய சற்கருமங்களை அனுஷ்டித்து சமம் தமம் முதலிய சாதனங்களுள்ளவனும், ஞான சாரியரைச் சரணமடைந்து ஞானபூமி கிரமமாகச் சிரவணாதி விசாரஞ்செய்து, சிவனருளால் சிவோகம் எனும் ஐக்கிய ஞானம் பெற்று, பேரின்பம் அனுப வித்து மீண்டுபிறத்தலின்றிய முத்தியின்பமடைவான்.

(சிவோகம், அகம்பிர்ஹ்மாஸ்மி என்னும் இரண்டு மகாவாக்கியத்திற்கும் பொருள் ஒன்றே, அனுபவமும் ஒன்றே.)

13. வேதாந்த சாஸ்திரத்திற் கூறிய அத்வைத அர்த்தத்தைத் திரிபாய்ப் பொருள்கொள்பவர்கட்கு அறிவுறுத்தல்

மனதை விசேஷணமாகவுடைய சீவன் தியான நிலையில் மனம் ஏகாக்கிரதையாயிருத்தலை ஐக்கிய மென்றும், அதுவே அத்வைதமென்றும் சிலர் கூறுவர். அது இருமனம் ஒன்றுசேர் திருமணம்போல் பிரிவு படும் மனம் பாதிக்கப்படாமையால் பிறவியிலிழுத்து விடும். வேதாந்த நூல்களில் மனதைப் பாதித்து ஆன்மா சிவம் ஒன்று என்னும் ஐக்கியங் கூறுகின்றது.

இதுவே அத்வைத ஞானம். பிறவித் துன்பம் நீங்கி பேரின்ப முத்தியையளிக்கும்.

ஞான பூமிகளின் கிரமமாக அத்வைத ஞானப் பழக்கமுள்ளவர்கள் மேலுக்குமேல் சென்று பேரின்ப முத்தியை எய்துவார்கள் அத்வைத பழக்கமுள்ள வர்கட்கு இறைவன் அருளும் உளதாகும். நிஷ்காம கர்மம் நிஷ்காமமாய்ச் செய்யுஞ் சிவபக்தியினுல் அத்வைத பழக்கம் வரும்.

**அப்பைய தீக்ஷிதர்**

> இளமதி புனைந்த ஈசன தருளால்
> அத்வைத வாசனை ஆடவர்க் குண்டாம்
> மற்றெல்லா வகையினும் இல்லவே இல்லை

என்று கூறியுள்ளனர்.

14. அத்வைத ஸ்தாபனுசாரியர் வரலாறு விளக்கங் கூறுதும்.

எல்லா வல்லபமும், எண்குணமும் எண்ணிறந்த சக்திகளையுமுடைய சிவபெருமான் தான் இருந்த வண்ணமிருக்கத் தன் சச்தியினுல் பஞ்ச கிருத்தியம் நடத்துகின்றுர். ஆனுல் எந்த கிருத்திய சம்மந்தமும் அவருச்கில்லையென்று சாஸ்திரத்தினுலும் சிவனருள் பெற்ற ஞானிகளாலும் புகழ்ந்து கூறப்படுகின்றுர்.

அவ்வாறு சிருஷ்யாதிகளில் சம்மந்தமில்லாதிருக் குஞ்சிவன் தனது சத்திய சங்கற்பம் (சக்தியம்சம்) கூபத்தில் விழுந்த குழந்தையை மாதாவும் விழுந்து எடுத்தல்போல பிறவி சமுத்திரத்தில் விழுந்து வருந்தி யுழலும் என்போன்ற மக்களை முத்தியின்பக் கரையி லேற்றுவிக்கும்பொருட்டு மானிடக் குழந்தையாக அவதரித்தது.

அக்குழந்தையினிடமிருந்த ரேகைகளின் சின்னங்களை அக்காலமுள்ள முதியோர்கள் கண்ணுற்றனர்.

சிரமதிற் பிறையின் சின்னஞ் சீர்மலி நெற்றி யின்கண்
வரமுள நயன வங்கம் வலிமிகு தோள்க டம்மில்
உரமுறு சூல சின்னம் வுயர்க மூத்ததனில் நீலம்
உரமதில் நாக சின்னம் ஓரிரு கரங்க டம்மில்

சக்கிரங் கதையே வில்லு தமருக மிவற்றின் சின்னம்
வக்கிர மில்பா தத்தே மன்னுசா மரத்தின் சின்னம்
உக்கிர மில்லாக் காயம் ஒளிவிடு படிக வர்ணம்
இக்கிர மத்தால் சம்பு விவனென மொழுவர் மேலோர்.

இவ்வாறிருந்த ரேகை சின்னங்களைக் கண்ட பெரியோர்கள் அக்குழந்தைக்கு சங்கரன் என்று நாமஞ் சூட்டினுர்கள். அதனுல் சங்கராம்சம் என்பது குழந்தையிலேயே உலகப் பிரசித்தமாயிற்று.

சங்கராம்சமாயவதரித்த ஸ்ரீ சங்கரர் கைலாயத்தில் நிவர்த்திமார்க்கமாய் ஸ்ரீ தக்ஷிணமூர்த்தியாக எழுந்தருளியிருந்து குரு சிஷ்ய சம்பிரதாயமாய் சனகாதியர்கட்கு தனது நிர்க்குண சொரூபத்தை உபதேசித்ததுபோலவே மண்ணுலகத்திலும் குரு சிஷ்ய சம்பிரதாயம் விளங்கவேணுமென்னும் பெருங்கருணையினுல்தான் நிவர்த்தி மார்க்கம் (சந்நியாச ஆஸ்ரமம்) வகித்து நான்கு பிரதான சிஷ்யர்களுடன் தாமும் வேதநெறி, சைவநெறி, பக்திநெறிகளையனுஷ்டித்து இமய முதல் சேதுபரியந்தமுள்ள மக்கள் ஷை மூன்று மார்க்கங்களையுமனுஷ்டித்துப் பிறவித்துன்பம் முதலியன நீங்கி அத்வைதானந்தமநுபவித்து ஆனந்த சொரூபமாய் நிலைத்த முத்தியையடையும்பொருட்டு குரு சிஷ்ய சம்பிரதாயங்களை ஸ்தாபித்தருளினுர்கள்.

மோக்ஷ சாதனங்களான சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பாதங்களையும் அவரவர் பக்குவத்திற்குத் தக்கவாறு உபதேசஞ்செய்துவந் தமையினால் உலக குருவெனப் பிரசித்தமாய் விளங்கி னார்கள்.

காலடி தனில்மால் காணுக் காலடி வைத்துத் தோன்றி
மாலொடு பிரம னாதி வானவர் சீட ராகித்
தாளடி பணிந்து நிற்கத் தந்தவிப் பாடி யாதி
ஆலடி தனிற்றான் நால்வர்க் கருளிய பொருளே யன்றோ.

பெண்ணாசைநீத் துயர்ந்தகுணப் பெருந்தவரே
பெற்றற்குரியா ருண்மை ஞானம்
நிண்ணயமீ தென்றுணர்த்த தென்முகனாய்
நீள்வடத்தே நிட்டை செய்தான்
மண்ணினுந்தான் துரியநிலை வகித்தயனா
மண்டனாதி யர்க்கு மீந்தான்
பெண்ணுமையாள் பங்குடையான் பெருங்கருணைப்
பெற்றியினைப் பேச லாமே

என்று பிர்மானந்த சுவாமிகள் கூறியுள்ளார்.

இவ்வாறாக அவதரித்த ஸ்ரீ சங்கர பகவத் பாதா சாரிய சுவாமிகள் வேத சம்மதமான அத்வைத ஸ்தா பனமும் ஷண்மத ஸ்தாபனமும் செய்தனர். இவை முதலியன செய்வன செய்து முடித்து மனித வடிவம் மறைந்து சத்தியம்சமாகிய சிற்கலை சிவபெருமா னிடஞ் சேர்ந்தது.

மானொடு கங்கை பாதி மற்றுள வெல்லாம் நீத்து
மானிட வடிவந் தாங்கி மண்ணினிற் மரிக்கு மந்த
மானுடர் போன்மா யாதவ் வளனுறு கைலை புக்கு
மானிடந் தாங்கு மையன் வடிவினிற் கலந்த தன்றே

என்று கூறியபடி ஸ்ரீ சங்கரர் மனித சரீரத்துடன் கைலை சென்றனர்

15. சிவன் சங்கரராக அவதரித்து அத்வைத ஸ்தாபனஞ் செய்வரென்று புராண இதிகாசங்களில் முன்னமே கூறியுள்ளதெனல்.

அவையாவன: சிவன் சங்கரராக அவதரிப்ப ரென்று கூர்மமாதி புராணங்கள் கூறுகின்றன. வேதாந்த ஆசிரியர்கள் யாவரும் ஆதிசங்கர பகவத் பாதாசாரியரை சிவ அவதாரமாகவே கொண்டுள் ளனர்.

சிவாம்சமாக அவதரித்த ஸ்ரீ சங்கரர் அத்வை தத்தை ஸ்தாபிப்பர் என்று சிவ ரகசியத்தில் கூறப் பட்டுள்ளது.

சிவரகசியம் என்பது பரமசிவம் பார்வதிக்கு உபதேசித்த சிவ இதிகாசம்.

சிவ இதிகாசம் இலட்சம் சுலோகமுள்ளது. 12 அம்சங்களையுடையது. அதில் 9வது அம்சம் 16வது அத்தியாயத்தில் கலியுகத்து சிவபக்தர் சரித்திரஞ் சொல்லவேணுமென்று உமையவள் கேட்க சிவ பெருமான் சொல்வதாவது,

கலியுகத்தில் என்னம்சமே சங்கரனாக அவதரித்து வேத புறம்பான மதங்களைக் கண்டனஞ்செய்து வேத சம்மதமான மதங்களை நிலைநாட்டும் என்று கூறியுள் ளனர். அதன் மொழிபெயர்ப்பினுள்ள சில செய்யுள் இங்கு காட்டப்படுகின்றன.

பரமசிவம் பார்வதி சம்வாத ரூபமான பக்தர் சரித்திரத்தை ஸ்ரீ சுப்பிரமண்யர் தன் சீடனுக்குக் கூறுகின்றார்.

சீருள கந்தன் சொல்வான் திருமறைச் சிரத்தின் மேலாம்
ஏருள வசன தாரை யின்புறக் கேட்டு மீண்டும்
வாரணி சைவக் கன்னி வானவர் வணங்கி யேத்துங்
காரணிக் கண்டன் றன்னைக் கனிவுட னினிது நோக்கி

உமாதேவி கேட்கின்றாள்,

பாரினில் கலிகா லத்தே பவித்திடு சிவமெய்ப் பத்தர்
பாரிய சரிதங் கேட்கப் பகருவா ளிந்த மாற்றம்
பூரியர் மிக்க நாளில் புகழ்பெறு பத்த ராகி
சீரிய நின்ப தத்திற் சேர்ந்திடு பெரியோர் தேசும்
மிக்கவற் புதம தாகி மேன்மையாம் பத்தி யீந்து
புக்கயிப் பவத்தின் மீண்டு புகுந்திடா கரைய தேற்றுந்
தக்கவச் சீரின் மிக்கார் சரிதமும் புகலு வாய்நீ
துக்கமில் பூமா னந்தச் சோதியோய் மகிழ்ந்தெ னக்கே.

சிவபெருமான் கூறுகின்றார்,

கிரிமகள் கேட்ட காலைக் கிரீசனு மொளிர்முக் கண்ணன்
மருவுமுக் கால மோரு மாட்சிமை யுள்ளான் பின்னர்
வருசிவ பத்தர் பத்தி மாண்பினைக் கண்டு மிக்க
மருவரு வியப்பி னாலே மௌலியை யசைத்துத் தேவன்
மெத்தநன் முயற்சி யாலே மிகவுமே மறைக்கற் பாற்றும்
பத்தரை யொழிந்தார்க் கஃது பகருதற் குரிய தன்றும்
நத்திய பாவம் போக்கும் நன்மையோ டாயு ளீயும்
சுத்தமாய்க் கேட்ப வர்க்கு தூயமங் கலமு மீயும்
தீவினை யொன்றே செய்வோர் செய்வினை யாவுநீத்தோர்
தாவிறம் வருணத் தோடு தக்கவாச் சிரமம் விட்டோர்
மேவியக் கலியோ தத்தின் மெத்த மூழ்கிஅதர் மந்தான்
மேவிடு மவரை நோக்கி மென்கரு ணையினாற் றேவி

என்னதாம் அம்சம் பெற்றேன் எவ்வமார் கலியின் கண்ணும்
உன்னருந் தவத்தின் மிக்கோன் வுயர்வுளமறையோன் றன்னை
அன்னமார் கேர ளத்தி லவதரித் திடச்செய் வேனப்
பின்னமி லாதான் காதை பேசுவன் கேட்டி கௌரி

ஏதமார் கலியி னுதி யீரிரண் டைஞ்னூற் றின்மேல்
ஓதுசா ரஸ்வ தர்மிக் கோங்குமிச் சிரரே கௌடர்
தீதுறு கரணர் மீனந் தின்றிடு பார்ப்பா ராதி
பூதர விந்தி யத்தின் புகழ்வட திசையி னுள்ளார்

மானவவ் வார்யா வர்த்தம் வசித்திடு மவர்க டாமும்
யீனராய்க் கலியி லந்தோ வியம்பிடு சத்த மாதி
ஞானங் கடம்மிற் றேர்ந்து நலிதர்க்க புத்தி மேவிச்
சைனரே பௌத்தர் புத்தி சதுரமீ மாஞ்சக் கர்மர்

என்றுமே பலராய்த் தோன்றி யியன்மறை தனக்கு வேறு
நன்றிலாப் பொருள்கொள் வோராய் நாடுபி ரத்தி யக்கம்
ஒன்றிய வாதத் தோராய் வுன்மத்த செய்கை மிக்கார்
நன்றுருக் கரும மேலா நற்பய னீயா னீசன்

அத்தகை யசடர் தம்மை யதஞ்செய வெனதம் சத்தால்
முத்தமார் கேர ளத்தே மொழிசல லமெனு மூரில்
சுத்தனும் வேதி யன்றன் றூயபத் தினிபாற் றேவி
வித்தகச் சுதனுய்த் தோன்றி மிளிருவன் ஞாயி றேபோல்

தந்தையார் சைச வத்திற் றற்பதந் தன்னைச் சார்ந்தார்
வந்திய மாதா மேலாம் வளவுப நயன கன்மம்
சுந்தர மாய்ச்செய் விக்கச் சுருதி களங்கத் தோடும்
புந்தியி லியாவுங் கொள்வான் பூர்த்தியா யோராண் டுள்ளே

பெற்றநல் வித்தை யோராய்ப் பிந்திடா வாதஞ் செய்யும்
அற்றமில் பௌத்தர் சைனர் அன்னிய குமுதப் பித்தர்
உற்றவர் தம்மை யெல்லாம் ஒருங்கிடச் செயித்துப் பின்னர்
பெற்றவ ளிசையச் சென்று பெறுவனற் சந்நி யாசம்.

மருவுமேக தண்டந் தாங்கி வனகமண் டலமு மேந்தி
உரியநற் காவி யாடை வுடுத்துவெண் பூதி தன்னல்
திரிபுண் டரங்க னுகி திரிவிலக் கமணி பூண்டவ்
வுரியதார ருத்தி ரார்த்த வுண்மையின் கரைகண் டோனய்

வீரியமார் சிவலிங் கத்தின் மேவு மருச்சனை செய்நேசச்
சீருளனுய்த் தன்னை யொத்த சீடர்க ளையுடை யோனுகிக்
கூரியநல் வித்தை யென்னுற் கொடுத்தரு ளப்பெற் ருேனுகி
ஏருறுபாடியச்சொற்கோடித்திந்துவைப் போலவிர் வானன்ருேன்
அத்துவித மாகத்தானே யமைதரு சூத்தி ரார்த்தஞ்செய்வான்
எத்துயரு மில்லா முத்தி யீந்திடு மக்கா சிதன்னில்
வித்தகமார் வியாசர் கண்டு வென்றவனை மெய்ம்மைவாக்கால்
பத்தியொடு மீசன் றன்னைப் பண்புறவே துதித்தல்செய்வான்

**தோத்திரம்**

சத்தியஞ் சத்தி யங்காண் சாற்றிடு நாநா விங்கு
சுத்தமா யில்லா தாகுந் தோன்றுல கீச னுன
சத்தனுல் வியாப்த மாய சத்தியப் பிரம மாகும்
மெய்த்திறப் பிரம மி·தா மேவுறு பிரம முன்பின்

உருத்திர னெருவன் ருனே யுளனிரண் டாவா னில்லை
ஒருத்தனே தேவன் பூதத் தொளித்துள னவ்வான் மாநீ
விரித்திடு நாம ரூப மேவிநன் கவிர்வா யோங்கிப்
பெருத்த பூரணந் தன்னின் மேற்பெரி யபூரண முமாவை.

உன்னினின் றுலக மெல்லா முதித்துநன் கிலகா நிற்கும்
உன்னது சத்தை யாலே யுயிர்க்குமிவ் விசித்தி ரங்கள்
உன்னது வடிவிற் ருனே யொடுங்கிடு மிவைக ளெல்லாம்
உன்னது துதியைச் செய்ய வொருவனு லாமோ ஈசா.

சிற்றறி வுடைமை யாலே சிறுவனு மியானு மிங்கு
முற்றறி வுடையான் போல முன்னுவன் புத்தி யாலே
முற்றுமா யிலகி யென்று முடிவிலா வின்ப மாகி
பற்றுறு மனத்திற் கெட்டா பரமனு நின்னை ஈசா.

**ஈஸ்வரன் வாக்கியம்**

இவ்வணம் சங்க ரன்ருன் இன்றுதி செய்த காலை
மெய்வண விலிங்க மொன்று மேவில னேனு மன்பால்
உய்வணம் விசுவேசப் பேருற்ற வென்னி லிங்கந் தன்னில்
மைவணக் கண்ட னுகி மதியணி முடியோ னுகி

மின்னுமுப் புண்ட ரத்தின் மிளிருபா லத்த னுகி
பின்னுறு சடைய னுகிப் பெற்றமுக் கண்ண னுகி
பன்னகங் கரியின் போர்வை பண்புற வணிந்தோ னுகி
பன்னியாம் வுன்ற னேடு பண்புறத் தோன்ரு நின்றே

சுந்தரச் சீட ரான துகளிலா நால்வ ரோடும்
மந்திர பூதி யக்க மாலையும் பூண்டு நன்கே
வந்தனை செய்து நிற்கு மாவெதி வரனை நோக்கிச்
சுந்தரி கேணீ யானுஞ் சொல்லுவ னிந்த மாற்றம்.

என்னுடை யம்ச மாக விப்புவி தன்னில் வந்தாய்
மன்னிடு மாறத் வைதம் வஞ்சகர் பாவ மார்க்கஞ்
தன்னிலே படிந்த தீயச் சதுர புத்தியு டையார்தம்
பின்னமார் துவைதந் தன்னைப் பேசுவாக் கியங்க டம்மால்

வேதம தொன்றி னுலே விளங்குறப் பெற்ற வந்தத்
தீதிலத் வைத மிங்குச் சிதைந்திடு காலத் தேநீ
பேதமா மலைத கர்க்கும் பெரியவச் சிரமாய் வந்தாய்
ஓதுநா லெட்டா மாயு ளொண்கைலை வருவா யாசு

கொள்ளுக பஞ்ச லிங்கங் கோதிலா விதனை நித்தம்
தெள்ளிய பூதி யக்கஞ் சீர்பெற பூண்டு பஞ்ச
எள்ளலில் அக்க ரத்தை யியல்புடன் செபிப்போ னுகி
நள்ளுச தருத்தி ரத்தி னலமுறு வர்த்த னத்தால்

தேசுள பிரண வத்தால் சிறந்தபூ தியினுல் வில்வ
மாசிலாப் பத்தி ரத்தால் மலர்களால் பல்வ கைத்தாம்
ஆசினை வேத்தி யத்தால் அன்பொடு மூன்று காலம்
பூசனை செய்து நன்கே போகுவாய் வென்றிக் காக

சுந்தரக் கைலைக் குன்றில் சுபாவியி லுள்ள வந்த
சந்திர னெத்த காந்தித் தவளமார் படிக லிங்கம்
சந்திர னெளிரு மோலி சமைந்தன கொணர்ந்தா நிற்காச்
சந்ததம் பூசை செய்நீ சகலமு மெளிதி னுகும்.

கலியினி லிலிங்கந் தன்னின் கனிவுள வருச்ச னத்தால்
நலிவிலா மேலா முத்தி நண்ணிடு வார்க ளென்று
சொலவுமச் சங்க ரன்முன் சுகசொரூ பனுய வென்னை
நலமுடன் வணங்கி மிக்கு நகுமிலிங் கங்க ளேற்று

செல்லுவன் வேக மாகச் சிதைப்பன பௌத்தர் சைனர்
புல்லிய மிசிர ராதிப் புன்னெறி யாளர் தம்மை
வெல்லுதல் யோகம் போகம் மேவரும் முத்தி யாவும்
சொல்லிய விலிங்க பூசைத் தொடர்பினுல் பெறுவா னன்றே.

அன்ன வாதியர் கடம்மை யரியசாத் திரவா தத்தால்
சின்னமெய் திடவே வென்றுச் சீடரை யெங்கு நாட்டிப்
பின்னமி லத்வை தத்தைப் பிறங்கிடச் செய்து காஞ்சி
நன்னக ரதனி னின்று நண்ணுவன் கைலை தன்னை

இந்தவா றுவியா தப்பே ரியல்சர் வஞ்ஞ வையன்
தந்தவம் மகேதி காசத் தகுசிவ ரகசி யத்தின்
ஐந்தொடு பதினென் ருகு மத்தியா யந்தே விக்கு
சந்திர சேகரன்முன் சாற்றிய தாகக் கூறும்.

இவ்வாறு வருங்காலத்தில் நிகழுஞ் சங்கரர் சரிதையை முன்னமே சிவரகசியத்தில் கூறியிருத்தலால் சர்வ சீவ தயாபரனுகிய சிவபெருமான் பெருங் கருணை நிகழ்ச்சியுற்று கைலாய முதலிய ஸ்தானங்களில் தபசினுல் ஞானசித்தி பெற்ற சிவகணங்கள், ரிஷிகள், முனிவர்கள் சீவன் முத்தி பதத்தில் ஞான நிஷ்டர்களாயிருந்து எந்த அத்வைதானந்தம் அனுபவிக்கின்ருர்களோ அதே அத்வைதானந்தத்தை மண்ணுலகின்கண்ணுள்ள மனித சரீரந் தரித்த சீவர்களும் சீவன்முத்தி பதத்தில் ஞான நிஷ்டர்களாய் அனுபவிக்கும்வண்ணம் அத்வைத ஸ்தாபனஞ் செய்தருளினுர்.

இவ்வானந்தானுபவத்தை ஞானவாசிஷ்டத்தில்,

மூவ ராகிய முதல்வரும் அமரரும்
மொய்த்த சித்தரும் வாழும்
சீவன் முத்தியாம் பதமடைந்து அருந்தவன்
செறியு மானந் தத்தில்
ஓவ லின்றிய நிறைவினுல் ஆனந்த
முதிர்ச்சி யாம்பத முற்ருன்
ஆவ தான பேரா னந்தம துவில்
அவ்வறி வினுற்றிகழ் வுற்ருன்

என்று கூறியிருத்தலால் நிஷ்காமமாய் சகுண நிர்க்குணவுபாசனே முதலான பெருந் தபசுகளேச் செய்து மறுமையில் மேல் பதவிகளேயடைந்து அனுபவிக்கத் தக்க அத்வைதானந்தானுபவத்தை இம்மையில் மனித சரீரத்திலேயே அனுபவிக்கும்படி வழிகாட்டியருளிய மகான் ஆதி ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகளே. அ வ ர து உபகாரம் சர்வ ஜீவதயாபரன் என்னும் இயற்கை பொருந்திய பெருங்கருணேயாம் அவருக்கு சமானுதிகமான கருணேயுள்ளாரில்லே.

இங்கொரு முறைதன் னும மியம்பு வார்க்கின் பமீயும்
சங்கர பகவத் பாதன் றண்ணளி தனக்குத் தானும்
இங்கொரு பொருளு மில்லே யீடெனச் சாற்றற் கன்னுன்,
துங்கமெய் நூல்க டாமே தூயநற் சாட்சி யாமால்

சங்கர னுபகா ரந்தான் சாலவும் பெரிதே யென்ன
இங்குள மனிதர் நன்கே யெளிதினி லுணரு மாறு
சங்கரன் சங்க ரிக்கு சாற்றிய படியே யானும்
சங்கரன் சரிதை தன்னேச் சாற்றுவன் தமிழி னுனே.

என்று ஸ்ரீ பிர்ஹ்மானந்த சுவாமிகள் கூறியுள்ளார்.

இவ்வாறு ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகளின் அவதாரத்தின் வைபவங் காட்டப் பட்டது.

16. ஈஸ்வர அவதாரங்களில் தெரிந்துகொள்ள வேண்டிய முக்கிய அம்சம் இவையெனல்.

சங்கர அவதாரம் சிவனது சத்திய சங்கற்ப சத்தியானது பஞ்ச பூதகாரிய தேகம்போல தோற்ற மாத்திர சரீரந் தாங்கி உலகில் செய்வன செய்து முடித்து சிவனிடத்தில் அடங்கிற்று. அவ்வாறின்றி சிவபெருமான் கைலாயத்திலில்லாமல் மண்ணுலகத்தில் அவதரித்தாரென்பதில்லை. சத்தியம்சம் சரீரந் தரித்தலினுல் சிவன் கர்ப்பவாசமிருந்து பிறந் தாரென்று சொல்லக்கூடாது. அவருக்கு சென்ம தோஷங் கற்பிக்கக்கூடாது. சிவனைப் பிறப்பிலி, தாயுமிலி, தந்தையிலி என்று நூல்கள் கூறுகின்றன.

ஸ்ரீ பகவான்

சாவாது பிறவாது தனிமுதலா யிருந்தநான்
ஆவாவிவ் வுலகுபடு மழிதுயர்தீர்ப் பதற்காக
மேவாது நின்றேயென் மாயையினுல் மெய்யேபோல்
ஓவாது பிறந்திடுவேன் உகந்தோறு முகந்தோறும்.

பிறப்பு இறப்பு இல்லாத நான், என் மாயையினுல் பிறக்கின்றேன் என்று கூறியுள்ளார்.

ஸ்ரீ சுப்பிரமண்ய சுவாமி வேதத்தின் கர்மகாண்டத்தை நிலைநிறுத்தும்பொருட்டு வடநாட்டில் குமாரிலப் பட்டராக அவதாரஞ்செய்தார்.

இதனை ஸ்ரீ சங்கரர் அவதார வரலாறு சரித்திரத் திற் காண்க. அன்றியும், ஸ்ரீ சுப்பிரமண்ய சுவாமி வேதத்தின் உபாசனு (பக்தி) காண்டத்தை நிலைநிறுத்

தும்பொருட்டு தென்னாட்டில் திருஞானசம்பந்தசுவாமியாக அவதாரஞ்செய்தார்

இதனை ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிச்செய்த வயலூர், பழனி முதலிய பல ஸ்தலங்களின் திருப்புகழிலும், முத்துக்குமரசுவாமி பிள்ளைத்தமிழிலுங் காண்க.

ஸ்ரீ சுப்பிரமண்யசுவாமி இருந்தவண்ணம் இருக்க தன் சத்தியம்சத்தால் குமாரிலப்பட்டராகவும் திருஞானசம்பந்தராகவும் அவதரித்தார் என்று உணர்தல் வேண்டும்.

சீவர்கட்கு கர்மமே சரீரந் தாங்கியுள்ளது. ஈஸ்வரனுக்கு சங்கற்ப சத்தியே அவதார சரீரந் தாங்கியுள்ளது எனக் கொள்க.

சிம்மாசனத்தில் ராஜா இருந்தவண்ணம் இருக்க ஆஞ்ஞையினால் மந்திரி முதலானவர்கள் நடத்துங் காரியங்களை ராஜா நடத்துங் காரியங்களாகக்கொள்வது போல ஈஸ்வரன் இருந்தவண்ணம் இருக்க சத்தியம்சத்தால் அவதாரம் எடுக்குஞ் சரீரங்களை ஈஸ்வரன் சரீரம் எடுத்தார், அதாவது பிறந்தார் என்று சாஸ்திரங் கூறுகின்றது அன்றியும், ஈஸ்வரன் ஒரே காலத்தில் பல சரீரங்களைத் தரிக்கவும் பல காரியங்களைச் செய்யவும் ஆற்றலுடையவரெனக் கொள்க.

சிவரகசியத்தில் சிவபெருமான் அவதரிப்பேன் என்று கூறவில்லை. எனது அம்சம்பெற்ற மறையவனை அவதரிக்கச்செய்வேன் என்று கூறியுள்ளனர்.

அன்றியும், ஸ்ரீ மாணிக்கவாசகருக்கு ஞானாசாரியராக வந்துபதேசித்ததுபோல வந்தால் உலகத்தில் குரு சிஷ்ய சம்பிரதாயம் பரம்பரையாக விளங்குவ

தற்கும் வைராக்கியத்திற்கு ஏதுவான கர்ப்பவாசம் முதலான சம்சார துக்கங்களை எடுத்துக்காட்டி மக்களுக்குப் போதிப்பதற்கும் ஏதுவாகாது.

ஆகலின், பிர்ஹ்மாண்ட பிண்டங்களெல்லாவற்றையுந் தரித்திருக்குஞ் சிவன் தன் சத்தியின் அம்சத்தினுல் சீவர்களைப்போல ஒரு மனித சரீரந் தரித்துத் தனது சங்கர நாமத்தைப் பெயராகக் கொண்டு ஜகத் குருவாகயிருந்து குரு சிஷ்ய சம்பிரதாய முறையாக உலகை உத்தாரணஞ்செய்தனரென்றுணர்க.

17. சந்தான ஆசாரியர்கள் வேதாந்த சித்தாந்த சமரச அத்வைத ஞானனுபவமுள்ளவர்களெனல்.

சிவஞான வள்ளலாரியற்றிய வள்ளலார் சாஸ்திரத்தில் துவைதத்தைச் சாதிக்கின்ற சைவர்களைக் கண்டித்து சந்தானுசாரியர்களை அத்வைத ஞானனுபவமுள்ளவர்களெனப் புகழ்ந்து தோத்திரஞ் செய்துள்ளார். அவர்கள் சமரச அத்வைத ஞானிகளாயினும் பக்குவிகளுக்குத் தக்கவாறு தமிழ் நூல்களியற்றியுள்ளார்கள்.

அந்நூல்களில் நிர்க்குண சிவபரம்பொருளினிலக்கணமும் அத்வைத கருத்துமுள்ள வாக்கியங்களும் சிலசில ஏகதேசமாயுள்ளன. அவற்றின் பொருள் துவைதத்தில் சத்தியபுத்தியுள்ளவர்கட்கு விளங்குவதில்லை.

நூல்களில் அத்வைத கருத்துள்ள வாக்கியம் ஏகதேசமாயிருந்தாலும் அந்நூலின் தாத்பரியம் அத்வைதமென்று கொள்வது ஆன்றோர்களின் சிஷ்டாசாரம். ஞான நூல்களுக்குப் பிரபல பிரமாணமான

வேதத்தின் ஞான காண்டத்து உபநிஷத் வாக்கியங்களைப் பிரமாணமாகக் காட்டி பொருள்கொள்வது உசிதம். விசார சந்திரோதயம் முதலிய வேதாந்த நூல்களில் அத்வைத ஞானம், சீவன் முத்தி, விதேக முத்தி இவற்றின் சாதனங்கட்கு ஞான காண்டம் 108 உபநிஷத் வாக்கியங்களில் பிரமாணம் காட்டியுள்ளது. அவ்வாறு சிவஞானபோத முதலிய சித்தாந்த நூல்களில் ஞான காண்டம் உபநிஷத் வாக்கியங்களில் பிரமாணங் காட்டிப் பொருள் கொள்ளாமையே சிலருக்குச் சமரசப் பொருள் விளங்காமைக்குக் காரணமென யூகித்துணரலாம்.

சிவஞானபோதம் வடமொழி சூத்திரம், தென்மொழி சூத்திரம் இரண்டையும் ஒத்துநோக்கிப் பொருளாராய்ச்சி செய்கின்றவர்கட்கு அத்வைத கருத்து புலனுகும். ஆகலின், சிவஞானபோதம் வேதாந்த சித்தாந்த சமரசமே கருத்துள்ளதாம்.

மேலும், சந்தானுசாரியர்களிலொருவர் சிதம்பர க்ஷேத்திரத்திலவதரித்த ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் அவர்கள் வடமொழியிலும் தென்மொழியிலுந் தேர்ந்தவர். அவரியற்றிய வடமொழி கற்பக விநாயகர் பஞ்சரத்தின ஸ்துதியில் கடைசி சுலோகத்தில் இத்துதியைத் தோத்திரஞ் செய்கின்றவர்கட்கு விரும்பிய பலன்களின் பிராப்தியும் * கைவல்லியமும் நிர்விக்கினமாய் சித்திக்குமென்றும், மேலும், அவரியற்றிய வடமொழி (ஸ்ரீ குஞ்சிதபாதாங்கிரிஸ்தவ:)

---

* முத்திகோபநிஷத் முதலிய வேதாந்த நூல்களில் கூறுகின்ற கைவல்லியம் என்னும் பதத்திற்கு அனர்த்த நிவர்த்தி ஆனந்த பிராப்தியாகிய மோக்ஷமே பொருளாம்.

ஸ்ரீ குஞ்சிதபாத தோத்திரராஜம் என்னும் நூலில் முதல் சுலோகத்தில் (பிர்ஹ்ம நிஷ்ட உமாபதி:) என்று தனது பிர்ஹ்ம நிஷ்டையினனுபவத்தைக் குறிப்பித்தும், கைவல்லியமென்னுஞ் சொல்லைப் பல சுலோகளில் பிரயோகித்தும் வேதாந்தத்தின் பொருளான அத்வைத கருத்துள்ள சுலோகங்களால் ஸ்ரீ குஞ்சித பாதத்தை (ஸ்ரீ நடராஜமூர்த்தியை) ஸ்துதிசெய்தும், 295வது சுலோகத்தில் ஆதி ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகளின் பிரபாவத்தைப் புகழ்ந்தும் சங்கரர் அவதாரத்தை சிவாம்சம் என்றுங் கூறியுள்ளனர்.

இவ்வாருகலின், ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் வேதாந்த சித்தாந்த சமரச அத்வைத ஞானனுபவமுள்ளவரென நிர்ணயிக்கத்தக்கது

ஆனல், அவர்களியற்றிய தமிழ் நூல்களில் பிர்ஹ்ம நிஷ்டை. சீவன் முத்தி ஆனந்தம், விதேக முத்தி முதலிய அவரது அத்வைத ஞானனுபவ இலக்கணம் விளக்கமாய்க் காணப்படவில்லையே எனில், அவ்வனுபவம் தென்மொழி மாத்திரங் கற்றவர்கட்கும் சாதனங்களின்றியவர்கட்கும் விளங்காது; பயன் படாது. அவர்களும் (பக்தி) உபாசனை ஞானம் ஆராய்ந்தனுஷ்டிக்கும் முறையாக. துவைத கருத்து வெளிப்படையாகப் பொருள் விளங்குகின்றதும், வடமொழி சொற்களாற் கூறுகின்ற அத்வைத கருத்து அடங்கியுள்ளதுமான வழி நூல்களியற்றியுள்ளனர்.

அன்றியும், தேவாரம் திருவாசகங்களில் சிவபதமாகிய ஆனந்த சொரூபத்தை விசேஷமாய் வர்ணித்தல்போல அவர்களியற்றிய நூல்களில் அவ்வாறு

ஆனந்த சொரூபத்தை வர்ணித்தலிராது என்பது ஆராய்ந்துணரலாம்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள் அத்வைத மத ஸ்தாபகராகயிருந்தும் பக்குவிகளுக்குத் தக்கவாறு உபாசனை கிரமமாக துவைதமாகிய ஷண்மதஸ்தாபனஞ் செய்தார்கள். ஸ்ரீ உமாபதி சிவாசாரிய சுவாமிகள் அத்வைத ஞானனுபவமுள்ளவராகயிருந்தும் பக்குவிகளுக்குத்தக்கவாறு உபாசனை கிரமமாக துவைத மத ஸ்தாபகராய் தமிழ் நூல்களியற்றியுள்ளனரென்றுணர்தற்பாலதாம்.

18. வேதாந்த நூல்களை மாயாவாதம் என்று கூறுகின்ற சாதாரண சைவர்களுக்கு வேதாந்தக் கருத்து மாயாவாதமல்லவென்றும், மாயாவாதம் இன்னதென்று நூன் முறையில் அறிவித்தல்.

ஸ்ரீ குமாரதேவ சுவாமிகள் அருளிச்செய்த சாஸ்திரக்கோவையில்

தந்தையார் தாயார் தாரமார் புத்திரரார்
பந்தமா ரெல்லாம் பரமா யிருந்ததே.

ஊரேது வுலகேது உடலேது உண்பொருளேது
சர்ப்பே துளவெல்லாந் தானுயிருந் தனமே.

தெருள்விழி யோர்துணி விதென
தேர்ந்தனு பூதியிற் கொள்வர்
மருள்விழி யோர்திரி விலதை
மாயா வாதம தென்பர்.

ஓவதனின் மூவெழுத்தும் ஓரெழுத்தே யானதுபோல்
சீவபர சிவமூன்றும் சித்தொன்றே யல்லவோ.

உயிர்பர மிரண்டும் உடலுயிர் போலப்
பின்னு சத்தியிற் பெற்றிடு முத்தி.

உயிர்பர மிரண்டும் ஒன்றே யாகி
அபின்ன சத்தியில் அடைந்திடு முத்தி.
அபின்னையைப் பார்த்தே அதுநீ யென்ன
அருமறை யோதும் அதுவறி யாமல்
பின்னையைப் பார்த்தே பேத வாதிகள்
பாவனை யென்றே பகுத்துரை செய்வர்.

இவற்றில் எல்லாம் பரம்பொருள் என்று கூறுகின்ற அனுபவத்தை மறுத்துக் கூறும் மருள் விழியோரை (மலத்தினல் மறைபட்ட மனதுள்ளோரை) மாயா வாதியென்று கூறியுள்ளார்.

திருமந்திரத்தில்

ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுவென்பர்
ஆகின்ற வாறாறுஞ் சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ் வேதாந்தி வைணவர்க்கு
ஆகின்ற நாலாறு ஐயைந்து மாயா வாதிக்கே.

இதில் வேதாந்திக்குத் தத்துவம் 28 என்றும், மாயா வாதிக்குத் தத்துவம் 25 என்றும், வேதாந்தம் வேறு, மாயாவாதம் வேறு என்றும் பிரித்துக் கூறியுள்ளது.

சித்தாந்த ஆசிரியர் சிவஞான வள்ளலார் சாஸ்திரத்தில்,

சமய சூறை யொருசார் தாக்க
அவாவெனும் பகுதி யறிவைக் கொளுவ
மாயா வாத வனசரர் வெருட்ட
இன்னண மாவி யிடருறுங் காலை
மனமே புருடன் அன்றிமற் றில்லை
என்றோதும் கனமாயா வாதி மதங்காண்

என்று கூறியுள்ளது

வேதாந்த ஆசிரியர் சொரூபானந்த சுவாமிகள் இயற்றிய பெருந்திரட்டில்,

*ஆதியா மறையி னோடு மிருதி யாகம மனைத்தும்*
*ஓதிய பரம முத்தி யுணர்ந்திடில் பரமன் சீவன்*
*நீதியா லிரண்டும் வுண்மை கண்டுபா திகளை நீக்கி*
*காதலா லொன்றாந் தன்மை கண்டனு பவித்த லேகாண்*

*ஆதலால் ஆர ணங்கள் அறைந்த அத்துவி தமிங்ஙன்*
*காதலாற் குரவன் காட்டக் கரத்திலா மலக மென்ன*
*நீதியாய் அனுப வத்தில் நிலையிலா சுட்க வாதப்*
*பாதகா மாயா வாதா பகர்தலும் அமையும் உன்பால்.*

இவற்றில் வேதாந்த நூலிற் கூறுகின்ற அத்துவிதத்தைக் குருவின் மூலம் அறிந்து அனுபவிக்குந் தன்மையின்றி சுட்கவாதம் பேசுகின்றவனே பாதகனான மாயாவாதியென்று கூறியிருப்பது காண்க

இவ்வாறு பூர்வாசிரியர்கள் மாயாவாதத்தின் பொருளைக் கூறியுள்ளனர். ஆகலின், வேதாந்த ஆசிரியர் அனுபவ வாக்கியங்களின் கருத்துக்களையும் மற்றும் வேதாந்த நூல்களின் தாத்பரியமான அத்வைதத்தையும் குருமுகமாக விசாரித்துணரவேண்டும்.

அவ்வாறுணருந்தவமின்றியவர்கள் சுத்த சைவத் துறையின் அனுசந்தானமில்லாதவர்கள் மாயாவாதத்தின் பொருளறியாது முரணுகக் கூறுவர். அன்றியும். நூல்களை ஆராய்ந்தறியுந் தரமின்றிய மந்தமதியினர். ஸ்ரீ மாணிக்கவாசகர் திருவாசகத்திற் கூறிய மாயாவாதம் என்னுஞ் சொல்லிற்கு வேதாந்தம் என்று பொருள் கொள்வர்.

ஸ்ரீ மாணிக்கவாசகர் திருவாக்கு

*மிண்டிய மாயா வாத மென்னும்*
*சண்ட மாருதஞ் சுழித்தடித் தார்த்து*

உலோகா யுதனெனும் ஒண்டிறழ் பாம்பின்
காலா பேதத் தகடுவி டமெய்தி
அதிற்பெரு மாயை யெனப்பல சூழவும்

என்று கூறியும் வேறிடத்தில்,

புத்தன் முதலாய புல்லறி விற்பல சமயம்
தத்தம் மதங்களிற் றட்டுளுப்பு பட்டு நிற்கும்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தன வேதவ மாக்கும்
அத்தன் கருணை யினுல்தோ ணேக்கமா டாமோ

என்றுங் கூறியுள்ளனர் இவை முதலிய வாக்கியங்களை மந்தமதியினரும் ஆராய்ந்து சிந்தித்தால் வேத நெறியிலாவது, சைவ நெறியிலாவது, பக்தி நெறியிலாவது அனுஷ்டித்தலின்றியவர்களும் சுட்க வாதம் பேசுகின்றவர்களும் வேத புறம்பான பல மதங்களின் வாதங்களும் தமிழ் உலகத்தில் மிகுதியாக இருந்தமையையுணர்ந்து ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அவ்வாறு கூறியுள்ளனர். வேதாந்தத்தை மாயா வாதம் என்று கூறவில்லை என்று விளங்கும்.

மேலும், வேதாந்த ஆசிரியரான சொரூபானந்த சுவாமி, தத்துவராய சுவாமிகள் ஸ்ரீ மாணிக்கவாசகரை வேதாந்த சாஸ்திரத்திற் கூறிய அத்வைத ஞான அனுபவமுள்ளவரென திருவாசகத்தினுல் உணர்ந்து புகழ்ந்து தோத்திரஞ் செய்துள்ளார்கள்.

தோத்திரம்

இங்கே வந்தின்னம் பிறவாம லீசாநின்
பங்கேருகப் பாதம் பற்றினேன் — சங்கேத
சாத்திரமும் பாரேன் சதுமுகன் மால்வாழ்வையணு
மாத்திரமும் பாரேன் மறந்து.
திருவாத வூர்முனிவர் திருவாச காபரண
சிறுதேரு ருட்டி யருளே.

தனது குரு திருவாசகத்தை ஆபரணமாகத் தரித்தவ ரென்று கூறியுள்ளனர்.

மறுவாசக மறுத்த வாதவூர் வள்ளல்
கருவுற்று வந்த கவலையையுங் கைக்கொண்டு
ஒருசொற்றெரித் தளித்த தோர்விரக முன்னி
பொருமிப் பொருமிப் புகலுங்கா ணெஞ்சின்
விறகற்ற மையின் விழியருவி நின்று
சொரியச் சொரியத் துயர்தீரக் கேட்டோர்
பொருளுண ராரும் புளகித்து நெஞ்சம்
உருக உருக உலகுய்ய வோதும்
திருவாசக மென்னுந் தேறல்.

வாசகத்தா லாவியை நின்றுருக்கு ஞான
மதயானை வாதவூர் வள்ள லோடு
மாசகற்றி யாயிரம் பேர்க்கீசனுர் நல்ல
வமிர்தளித்தா ரெமக்கி ரங்கியருளா ரின்னுள்.

இவ்வாறு தத்துவராய சுவாமிகள் மாணிக்கவாசக சுவாமியைத் தோத்திரஞ் செய்துள்ளனர். ஆகலின், இவர்கள் இருவருடைய அத்வைத ஞானனுபவம் ஒன்றே எனவுணரலாம்.

இவ்வாறு ஆராய்ந்துணர்ந்தவர்கள் மாணிக்க வாசகர் மிண்டிய மாயாவாதம் என்று கூறியது வேதாந்தத்தையன்று என்றுணர்வார்கள்.

மேலும், திருவாசகம் தேவாரங்களின் தாத்பரி யம் அத்வைதம் என்றுணர்ந்த தத்துவராய சுவாமி, சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவரையுந் தோத்திரஞ் செய்துள்ளார். அவற்றை தத்துவராய சுவாமி அருளிச்செய்த அடங்கல் முறையில் காண்க.

19. அத்வைதவாதி, துவைதவாதி இன்னுரென நிர்ணயித்தல்.

அத்வைத ஞானத்தால் மலமாயையை நாசஞ் செய்து இரண்டற்ற பூரண நிலையை ஸ்தாபனஞ் செய்பவரே அத்வைதவாதியாம். எல்லா தேசத்திலும், எல்லா காலத்திலும். எல்லா வஸ்துவிலும் நிறைந்து பூரணமாயுள்ள சிவமே உண்மைப்பொருள். அதுவே அத்வைதமாம் வேதாந்த நூல்கள் அத்வைதத்தை ஸ்தாபித்து பிரதிபாதிக்கின்றது. வேதாந்த ஆசிரியர்களெல்லோரும் அத்வைதத்தையே ஸ்தாபித்துக் கூறுகின்றவர்கள். அவர்களை அத்வைதவாதி என்றும் அல்லது சிவமாகிய பிர்ஹ்மத்தை ஸ்தாபித்துக் கூறுகின்றவர்களாதலால் அவர்களைப் பிர்ஹ்மவாதியென்றுங் கூறுவது தகுதியாம்.

சொப்பனத்துக்குக் காரணமான அவஸ்தாஞ் ஞானமும் அதன் காரியமான சொப்பனவுலகமும் விழித்தவனுக்கு நாசமாவதுபோல ஞானத்திஞல் நாசமாவதாயும், மித்தையாயுமுள்ள மாயையும், மாயையின் காரியமாய்த் தோன்றிநின்று மறைந்துபோகின்ற நாம ரூப வடிவ உலகத்தையும் உள்பொருள்போல் துவைதத்தை ஸ்தாபித்துக் கூறுகின்றவரையே துவைதவாதியென்று கூறுவது தகுதியாம்.

மேலும், மூன்று காலத்திலும் உண்மைப் பொருளாயிருப்பது சிவம். அதுவே சத்தியம். அதுவே அத்வைதம். முன்னும் பின்னும் இல்லாமல் மத்தியில் தோன்றி நின்று மறையும் பொருள் தேகேந்திரியாதிவுலகம். அதனை மித்தையென்றும் துவைதமென்றும் கூறப்படும்.

இந்திரஜால வித்தை காட்டுபவனிடத்துள்ள சத்திக்கு இருப்பு அவனைத் தவிர வேறு காணப்படா

ததுபோல நாம ரூபங்களான காரியமாகியவுலகத்தைத் தோற்றுவிக்கிற காரணமாகிய மாயைக்குச் சிவத்தைத் தவிர இருப்பு வேறு இல்லாமையினுல் சிவம் அத்வைதம், அதாவது, ஏகம் என்றுணர்க.

மாயையினுல் துவைதம் சித்திப்பதில்லை. அத்வைத ஞானத்திற்கு விரோதமுமில்லை. மாயையின் காரியமான உலகம் உற்பத்திக்கு முன்னுமில்லாமல் அழிந்தபின்னுமில்லாமல் மத்தியிலும் சிவத்தை இருப்பாகத் தோன்றிநின்று மறைந்துபோவதால் மித்தை மண்ணில் கடமாகிய நாப ரூபம் தோன்றிநின்று மறைகின்றதால் மித்தை மண்ணே சத்தியம் என்று கூறுவதுபோலாம்.

உலகம் மித்தையென்று கூறுகின்ற நூல்கள். ஸ்ரீ தாயுமான சுவாமிகள்,

அண்டபகி ரண்டமும் மாயாவி காரமே
அம்மாயை இல்லாமையே என்றும்,

தந்தைதாய் மகவுமனை வாழ்க்கை யாக்கை
சகமனைத்தும் மௌனியருள் தழைத்த போதே
யிந்திரஜா லங்கனவு கானனீரா யிருந்ததுவே
யிவ்வியற்கை யென்னே யென்னே.

இவை முதலிய அனேக திருஷ்டாந்த வாக்கியங்களால் மாயை மாயாகாரியமாகியவுலகம் மித்தையென்றும்,

கான்முயற் கொம்பே என்கோ
கானலம் புனலே என்கோ
வான்முக முளரி என்கோ
மற்றென்கோ விளம்ப வேண்டும்.

காரியவுலகத்தின் காரணமான மாயையைத் தோற்றமில்லையென்றும் அசத்து என்றுங் கூறியுள்ளனர்.

ஸ்ரீ மெய்கண்டதேவர் சிவஞான போதத்தில், 7-ஆம் சூத்திரத்தில் 'யாவையுஞ் சூனியம்' என்றது, வான்மலர்போல் உலக முழுவதும் அசத்து என்று பொருள், அதாவது காரிய வடிவவுலகமும் காரண மாகிய மாயையும் சிவத்தைத் தவிர இருப்பின்மையால் அசத்தாம்.

9-ஆம் சூத்திரத்தில் (ஊராத்துணைத் தேர்த்தென பாசம் ஒருவ) என்றது அகந்தை மமதைக்கு விஷய மாகிய அகப்பற்று புறப்பற்றுக்கள் முழுவதும் கானல் சலம்போல் மித்தையென்றுங் கூறியுள்ளனர்.

இவ்வர்த்தம் சத்து அசத்து விவேகமுள்ள அறி ஞர்களுக்கு விளங்கும். பழுதையிற் றோன்றும் பாம்பு மித்தையெனும் நிச்சய புத்தியுண்டானல் பழுதை ஞானமுளதாம். அதுபோல் சிவத்தில் தோன்றும் உலகம் மித்தையெனும் நிச்சய புத்தியுண்டானல் சிவஞானமுளதாம். அதுவின்றி அதுவில்லை. ஆகலின், பொய்யானவுலகத்தைப் பொய்யென்று கண்டு மெய் யான சிவத்தை மெய்யென்று கண்டவராதலின் மெய் கண்டதேவரைச் சிவஞானி, அத்வைத ஞானியெனப் புகழ்ந்து தாயுமானவர் தோத்திரஞ்செய்துள்ளார்.

> பொய்கண்டார் காணுத புனிதமெனும் அத்துவிதம்
> மெய்கண்ட நாதனடி மேவுநா ளெந்நாளோ.

புனிதம் எனும் அத்வைதம் — சுத்த அத்வைதம். அதாவது அவித்தையா மலம், மாயா மலமாகிய அசுத்தங்களில்லாதது சுத்தமென்று நூல்களிற் கூறு கின்ற அத்வைத சிவமாகிய உண்மைப் பொருளை உண்மையாக அனுபவத்தில் சாட்சாத்கராமாக வுணர்ந்த சிவஞானியாதலின் மெய்கண்டநாதன்

எனவும், அவித்தையா மலம் — வியஷ்டிதேகேந்திரியாதிகள், மாயாமலம் — பஞ்சபூதாதி சமஷ்டியுலகம். இவ்விரு அசுத்தங்களின்றியது சுத்த சிவம்.

பழுதை மறைந்து பாம்பு தோற்றுவதுபோல் அகண்ட பரிபூரண சத்துசித்து ஆனந்த அத்வைத சிவம் விளங்காமல் நாம ரூபங்களாகத் தோன்றி மறையும் உலகத்தை வுண்மைபோல் காண்கின்றவரெவரோ அவரைப் பொய்கண்டாரெனலாம்.

பாம்பு பொய்யென்றும் பழுதையே மெய்யென்றும் அறிவதுபோல முன்னும் பின்னும் இல்லாமல் மத்தியிலும் சிவத்தைத் தவிர இருப்பின்றி நாம ரூபங்களாகத் தோன்றி மறையும் உலகைப் பொய்யென்றும் அகண்ட பரிபூரண சத்து சித்து ஆனந்த அத்வைத சிவமே மெய்யென்றும் உள்ளதை உள்ளபடியே அறிந்த சிவஞானியாதலின் மெய்கண்டநாதன் என்று புகழ்ந்து கூறினர்.

மேலும், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி மூன்றவஸ்தைக்குட்பட்டவரைப் பொய்கண்டாரெனவும், மூன்றவஸ்தைக்கும் மேலான துரியாவஸ்தையனுபவமுள்ளவரை மெய்கண்டாரெனவுமாம்.

துரியாவஸ்தையனுபவத்திலிருந்து சூத்திரம் அருளிச்செய்தனராதலின் மெய்கண்டநாதனடிமேவு நாளெந்நாளோ என்று புகழ்ந்து கூறியுள்ளனர்.

சித்தாந்த மரபில் வந்த தாயுமானவர் மெய்கண்டநாதரைப் புகழ்ந்து கூறியதுபோல் வேதாந்த பரம்பரையாசிரியர்களான சனகாதிகள், சுகர், வாமதேவர், ஜனகர் முதலிய அத்வைத ஆசிரியர்களைப் புகழ்ந்து கூறியுள்ளனர்.

வேதாந்த சித்தாந்த சமரச நிலையைத் தெளிவாய் மக்களுணரும்படி செய்தவர் ஸ்ரீ தாயுமான சுவாமிக ளென்றுணர்தல் வேண்டும்.

20. வேதாந்த சித்தாந்த சமரசமுணராதவர் களின் பிரவிருத்திகளையும் அவர்கட்கு சமாதானமுங் கூறல்.

திருமூலர் திருமந்திரத்தில் வேதாந்தி வேறு மாயாவாதி வேறென்று கூறியிருப்பதையும், மற்றும், நூல்களில் மாயாவாதத்தின் பொருளுணர்த்தியிருப் பதையும் உணராதவர்களாய் வேதாந்த நூல்களின் தாத்பரியமான பொருளையறிவதற்குத் தவமின்றிய வர்கள் வேதாந்த நெறியிலுள்ள ஞான சாதனங்களை யனுஷ்டிக்கின்ற வேதாந்தியை மாயாவாதியென்றும் வேதாந்தத்தை மாயாவாதமென்றுங் கூறுவர்.

அதனாலவர்கள் வேத நெறியில் நாஸ்திகமுள்ளவ ராவர். அவரை (பாகண்டின:) வேத நிந்தகரென்று நூல் கூறுகின்றது. மேலும், அவர்கள்தான் வேத நெறியிலுள்ள ஞான சாதனங்களை நல்லாசிரியர் முன் பாகக் கேட்டுணராமலும் அனுஷ்டிக்கவேணுமென் னும் விருப்பமில்லாமலும் ஒன்றுக்கொன்று மாறான வார்த்தைகளைப் பேசி அந்நியர் புத்தியையுங் கெடுத் தவராவர்.

விரும்பல ராகி யொழுக்கங்கள் துறந்தார்
மெய்ம்மையுஞ் செம்மையும் விட்டார்
இரும்பய னென வறிவுமாய்ந் துள்ளாரிடம்
ப்டாம னத்திஞே டிசைந்தார்

பெரும்பழி யான தொழில்களே புரிவார்
பிழைப்பு வாய்ப்பொன் றறியாதார்
அரும்பகை யாயிவ் வுலகினை யெல்லா
மழிப்பதன் பொருட்டவ தரித்தார்

என்று ஸ்ரீ பகவான் கூறியுள்ளார்.

வேதாந்த நூல் கற்றவர்களில் தக்க செய்கை யில்லையென்று சிலர் கூறுவர். அதற்கு சமாதானம். உலகில் வேதாந்த சாஸ்திரம் உணர்ந்தவர்களில் பெரும்பாலும் அதில் கூறியவண்ணம் அனுஷ்டிப் பதில் சாதகர்களிலும் சாத்தியர்களிலும் ஏற்றமுள்ள வர்களாகவேயிருப்பர்கள்.

பொற்புறுநல் லாசார விரோதமான
போகங்கட மிற்சிறிதும் பொருந்திடாதோன்

என்று ஞானவாசிஷ்டத்திற் கூறியிருப்பது காண்க.

ஓர் நகரையடைய விரும்பும் புருஷன் மார்க்கத்தி லுள்ள அடையாளங்களைக் கேட்டு நடந்துபோகையில் முதல் அடையாளங்களைக் கண்டு அதனை விடுத்து மேல்நோக்கி ஒவ்வொரு அடையாளத்தையுங் கண்டு விடுத்துக்கொண்டே போய் நகரை அடைவதுபோல வேதாந்த சாஸ்திரத்திற் கூறிய பகிரங்க அந்தரங்க சாதனங்களை அனுஷ்டிக்கின்றவர்கள் மேற்கொண்ட சாதனங்களை அனுஷ்டிக்கும் விருப்பத்தினல் கீழ் சாதனங்கள் வெளிப்பட அனுஷ்டியாதிருந்தாலும் கீழுள்ள சாதனங்கள் ஏற்கனவே அனுஷ்டித்தவர்க ளென்று கொள்ளவேணும். ஆகலின், அவர்களைக் கண்டு வெளிப்பார்வையான நடையில்லை என்று கூறுதல் பொருந்தாது.

ஏகதேசமாய் வேதாந்த சாஸ்திரத்தை சாதன மின்றியும் குருவின்றியும் படித்தவர்களில் சிலர் அதிற் கூறியவண்ணம் அனுஷ்டித்தலின்றி பேச்சளவி லிருந்துகொண்டு இழிவான பிரவிருத்தியுள்ளவர்களா யிருப்பர்கள்.

சித்தாந்த சாஸ்திரம் படித்தவர்களில் அதில் கூறியவண்ணம் அனுஷ்டிக்க வேணுமென்னுஞ் சாதனையின்றி பேச்சளவில் சிலர்( அவனன்றி ஓரணுவு மசையாது) எல்லாம் அவன் செயல், சிவன் செயல் என்று சொல்லிக்கொண்டு இழிவான பிரவிருத்தி யுள்ளவர்களாயிருப்பர்கள்.

இருவகையிலும் நடை ஒழுங்கானவர்களுமிருப் பர்கள். நடை பிசகானவர்களுமிருப்பர்கள். ஆனாலும், வேதாந்த நூல் கற்றவர்களை வேதாந்த நூலின் கருத் தறியாத சிலர் நிந்தைகூறுவது அயுக்தமாம்.

21. அத்வைதம் சத்தியம், துவைதம் மித்தை என்று விளக்கஞ்செய்தல்.

மூன்று காலத்திலும் உண்மைப் பொருளா யுள்ளது சத்தியம். அதுவே சிவம், சத்தியம், அத் வைதம் என்னும் வாக்கியத்தாலும் பிர்ஹ்மம், சத்தி யம், அத்வைதம் என்னும் வாக்கியத்தாலும் கூறப் படும்.

முன்னும் பின்னும் இல்லாமல் மத்தியில் இருப்பு இல்லாமல் மண்ணிற் கடத்தின் நாம ரூபம்போல தோன்றிநின்று மறையும் நாம ரூபமுள்ள பொருள்கள் மித்தை. அதாவது (ஜகன்மித்யா) என்னும் வாக்கி யத்தால் உலகம் பொய் என்றும் (மித்தையென்றும்) மித்தையைத் துவைதம் என்றுங் கூறப்படும்.

பிர்ஹ்மம், சிவம், பரம்பொருள் என்னுஞ் சொற்களின் பொருள் ஒன்றே. அத்வைதம், ஏகம், ஒன்று என்னுஞ் சொற்களின் பொருள் ஒன்றே.

நிஷ்காமகர்மம், நிஷ்காமமான சிவபக்தியுள்ளவனுக்கு ஞான சாதனங்கள் பூரணமாகும். அவனுக்கே சிவனருளால் அத்வைத ஞானனுபவம் உளதாகும். அத்வைத ஞானம் உளதானல் உலகம் பொய் என்று தோன்றும். உலகம் பொய் என்று அனுபவத்தில் காணப்பட்டால் அத்வைத ஞானம் சுயமே பிரகாசிக்கும். ஆனதால் சுருதியுக்தியினுல் உலகம் பொய் என்பதைத் தீர விசாரித்து மித்தையாத்துவ புத்தியை அப்பியாசிக்கவேண்டும் என்பது கருத்து.

22. உலகம் பொய் என்றப்பியாசஞ் செய்வதற்கும் சற்கருமங்கள் அனுஷ்டிப்பதற்கும் இஷ்டமான தெய்வத்தை உபாசனைசெய்வதற்கும் விரோதமில்லையெனல்.

**சுந்தரர் தேவாரம்**

''வாழ்வாவது மாயம் இதுமண் ணுவது திண்ணம்''

''பொய்த்தன்மைத் தாய மாய போர்வையை
மெய்யென் றெண்ணும்
வித்தகத் தாய வாழ்வு வேண்டிநான்
விரும்பு கில்லேன்''

**அப்பர் தேவாரம்**

''பொய்யினல் மிடைந்த போர்வை
புரைபுரை அழுகி வீழ
மெய்யனய் வாழ மாட்டேன்
வேண்டிற் றென்றைவர் வேண்டார்''

"பொய்மாயப் பெருங்கடலிற் புலம்பா
நின்ற புண்ணியங்காள்"

"தந்தையார் தாயாருடன் பிறந்தார்
தாரமார் புத்திரரார் தாந்தாமாறே
வந்தவா றெங்ஙனே போமாறேதோ
மாயமா மிதற்கேதும் மகிழவேண்டாம்"

இவை முதலிய வாக்குகளால் உலக வாழ்வு பொய் யென்று கூறி இகலோக பரலோக சுகமாகிய பொய் வாழ்வை அடைவதற்கும் திருவடி (மெய்வாழ்வு) அடைவதற்கும் சாதனமாகத் தேவாரத்தை ஓதுகின்ற வர்களுக்குப் பலனும் கூறியுள்ளது.

மாணிக்கவாசகர்

"இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை"

"யானே பொய்என் நெஞ்சும் பொய்என் அன்பும்பொய்
ஆனல் வினையேன் அழுதா லுன்னைப் பெறலாமே"

எல்லாம் பொய் என்று கூறிக் கனிந்த பக்தியால் இறைவனை அடையலாமென்று கூறியுள்ளது.

சிவஞானபோதத்தில்

"யாவையும் சூனியம்"

என்னும் வாக்கியத்தால் வான்மலர்போல் உலகம் அசத்து என்றும்,

"உராத்துனைத் தேர்ந்தென பாசம் ஒருவ"

என்னும் வாக்கியத்தால் கானல் சலம்போல் உலகம் பொய் என்றும் திருட்டாந்தபூர்வகமாயுணர்த்தி, பிறகு,

"அன்பரொடு மரீஇ ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே"

என்னும் வாக்கியத்தால் சற்கரும உபசானை அனுஷ் டானங்களைச் செய்யவேணுமென்றுங் கூறியுள்ளது.

**பகவத்கீதையில்**

கனவுந்திகழ் கழுதாழியு மிருகந்தர்வ நகரும்
எனவந்தழி தலினுலுரு வதுவின்றிய தியாவும்
முனம்வந்திடும் முதனுளொடு முடிவின்மை யினுலே
தனதந்தமும் முதலுந்தெரி தரவில்லது தானே

என்று திருட்டாந்தபூர்வகமாய் உலகம் பொய் என்று கூறி கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் அனுஷ்டிக்கவேண்டுமென்று கூறியுள்ளது.

உலகம் பொய் என்று விஸ்தாரமாகக் கூறுகின்ற ரிபு கீதையில் இறைவனை வழிபடுகின்ற பக்தி மார்க்கத்தினை ஐயமின்றியுணரலாம்.

இவ்வாறு சாஸ்திரங்கள் கூறுகின்றதனுல் உலகம் பொய்யென்னும் மித்தையாபுத்தி அப்பியாசிப்பதற்கும் மோக்ஷ சாதனங்களான பகிரங்க அந்தரங்க சாதனங்களை அனுஷ்டிப்பதற்கும் யாதொரு விரோதமுமில்லையெனவறிக.

23. மேலும், எல்லாம் பொய் என்னும் நிச்சயத்திற்கும் சாதனங்களை அனுஷ்டிப்பதற்கும் விரோதமில்லையென்று சித்தாந்த ஆசிரியர் ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகளியற்றிய சிவபோக சாரத்தில்,

உரையிறந்தா லுன்னு முணர்விறந்தால் மாயைத்
திரையிறந்தால் காண்கின்ற தேவை — வரைபெருக
வாசிப்பது நாவால் வாழ்த்துவது நாடகமாய்
பூசிப்பதுஞ் சுத்தப் பொய்.

பாவிம னம்போய்த் பரத்தை யடைய நாளும்
இரவுபக லற்ற விடத்தே — திறமாக
நில்லென்ருன் கண்டவெலா நேதிபண்ணி மும்மலமும்
கொல்லென்ருன் ஞான குரு.

துரத்தியுன்னை யாசைத் தொடராம லென்றும்
விரத்தியினு லாங்க வற்றைவிட்டு — பரத்தில்
செய்யடா செய்யடா சேரப்பிர பஞ்சமெல்லாம்
பொய்யடா பொய்யடா பொய்.

எத்தனை தான் கற்ருலும் எத்தனை தான் கேட்டாலும்
எத்தனைசா தித்தாலும் இன்புரு — சித்தமே
மெய்யாகத் தோன்றியிடு முலகவாழ் வனைத்தும்
பொய்யாகத் தோன்ருத போது.

ஆசையருய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணுய்
நேசமுட னைந்தெழுத்தை நீநினையாய் — சீசீ
சினமே தவிராய் திருமுறைக ளோதாய்
மனமே வுனக்கென்ன வாய்.

இவற்றில் எல்லாம் பொய் என்று கூறி கிரியை முத லியதை செய்யென்று கூறியிருப்பது காண்க.

இவ்வாறு வேதாந்தம் சித்தாந்தம் இருவகை நூல் களிலும் எல்லாம் (உலகம்) பொய் என்று கூறுகின் றது. ஆகலின், எல்லாம் பொய் என்னும் நிச்சயத் துக்கும் ஞான சாதனங்களை அனுஷ்டிப்பதற்கும் விரோதமில்லை என்றுய்த்துணர்க.

24. வேதாந்த நூலின் கருத்தறியாது வேறு நூல் படித்தவரியல்பு.

வேதாந்த நூல்களிற் கூறுகின்ற திருட்டாந்தங் கள் ஞானுதிகாரிக்குத் தாட்டாந்தத்தின் ஞானமுள தாகும்பொருட்டு கூறுகின்றது. திருட்டாந்தம் குரு வுக்குஞ் சீடனுக்குந் தெரிந்தது. தாட்டாந்தங் குரு வுக்கு மாத்திரந் தெரிந்தது. அதனைச் சீடனுக்கறி விக்கும்பொருட்டு திருட்டாந்தங் கூறப்படுகின்றது. திருட்டாந்தத்தின் ஏகதேச அம்சம் தாட்டாந்தத்தில்

பொருந்தும். எல்லா அம்சமும் பொருந்தாது. பொருந் தாதனவற்றைத் தாட்டாந்தத்திற் காட்டி வேதாந் தத்தைப் புறக்கணித்துத் தன்னையொத்த ஒருவருக் கொருவர் பேசுகின்றவராய்க் களிப்புறுவோர் மணற் சோற்ருல் திருப்தியடையுங் கன்னிகை போலாம்.

*சின்னஞ் சிறுவர் செய்த மணற் சோற்றை யொக்கும்*
*மன்னுகலை ஞான மார்க்கம் பராபரமே.*

அனுபவம் பொருந்தாத கலை ஞானம் மணற்சோற் றுக்குச் சமானம் என்று தாயுமானவர் கூறியுள்ளார்.

## 25. வைதீகம், சைவம் இரண்டுமொன்றெனல்.

### திருவிளையாடல்

*மறைவழி மதங்கட் கெல்லா மறைபிர மாணம் பின்சென்*
*றறைதரு மிருதி யெல்லா மவைக்கனுக் குணமா மின்ன*
*முறையினுன் மார்த்த மென்று மொழிவதம் மார்க்கஞ் சேர்ந்த*
*துறைகள் வைதீகமா மேலாச் சொல்வரிச் சுத்த மார்க்கம்.*

சுத்த மார்க்கம் — சுத்த சைவம். இதனை வைதீக சைவம் என்று கூறுவர்.

*அருமறை நால்வே ருகையால் வருண*
*மாச்சிர மங்களு நான்காம்*
*தருமம் யாகாதி கருமமும் மறையின்*
*றகைமையிற் ேருன்றின மறையும்*
*கருமநூல் ஞான நூலென விரண்டாங்*
*கரும நூலருச் சனைக்கு*
*வரும்வினை யுணர்த்தும் ஞான நூலிவன்றன்*
*வடிவிலா வடிவினை யுணர்த்தும்.*

சைவமும் வேதாந்தமும் ஒன்றென்று வேதாந்த ஆசிரியர் ஸ்ரீ சங்கரரைத் துதிக்கின்ருர்.

சைவவே தாந்த மென்னுந் தனிமதந் தழைத்து மற்றைச்
சைவமில் மதங்களி யாவுந் தரித்திடா தொழியு மாறு
சைவநற் குரவ னுகிச் சங்கரப் பெயரால் வந்த
சைவமா தொருபா கத்தன் சரணமெம் முடிமேற் கொள்வாம்

என்று கூறியுள்ளனவாகலின், வேதத்தின் ஞான காண்டப் பொருளைப் பிரதிபாதிக்கின்ற வேதாந்த சாஸ்திரம் சிவபரம்பொருளாகிய நிர்க்குண சொரூபத்தையுணர்த்துகின்றது. இதுவே சுத்த மார்க்கம். இதனை வைதீக சைவமென்றும் சுத்த சைவமென்றும் உண்மையுணர்ந்தோர் கூறுவர்.

வேதாந்த சாஸ்திரத்தின் கருத்தையுணராதவர்கள் சுத்த சைவரல்லர். சித்தாந்த நூல் மாத்திரங் கற்றுளோர் சாதாரண சைவர்.

திருமூலர் திருமந்திரத்தில்

"வேதாந்த மல்லாத சித்தாந்தங் கண்டுளோர்
சாதாரணம் அன்ன சைவர் உபாயமே"

என்றும்,

வேதாந்திக்கு சித்தாந்தி சீடனுக இருக்கவேணுமென்றும்,

வேதாந்தமின்னது, சித்தாந்தமின்னது, மாயாவாதமின்னது என்றும்,

சுத்த சைவம் சாதாரண சைவம் இன்னதென்றும் இவற்றின் இலக்கணங்கள் முதலியன யாவையும் மயக்கமுள்ளவர்களுக்குந் தெளிவுபடக் கூறியுள்ளனர். மேலும், ஆனந்தத் தொகுதியில் வேதாந்த சித்தாந்த விளக்கஞ்செய்துளார்.

2370. வேதத்தின் அந்தமும் மிக்கசித் தாந்தமும்
நாதத்தின் அந்தமும் நற்போத அந்தமும்
ஓதத்தகு மெட்டியோ காந்த அந்தமும்
ஆதிக்க லாந்தமும் ஆறந்த மாமே.

(கருத்து) வேதத்தின் அந்தமாகிய ஞான காண்ட வுபநிடதங்களிற் கூறுகின்ற 'தத்துவமசி' முதலிய நான்கு மகாவாக்கியப் பொருளின் அநுபவம் சித்தத்தின் அந்தமாகிய, அதாவது. ராசத தாமத விருத்தியாகிய பரிணமம் நீங்கிய சுத்தசத்துவ சித்தத்தில் விளங்குவதாயிருத்தலின் சித்தத்தின் அந்தத்தை மிக்க சித்தாந்தம் என்று சிறப்பித்ததாம். வேதத்தின் அந்தம் வேதாந்தமென்று கூறுவதுபோல சித்தத்தின் அந்தம் சித்தாந்தமென்று கூறுவதுமாம்

2393. சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்
அவமவ மாகுமவ் வவ்வி ரண்டுஞ்
சிவமாஞ் சதாசிவன் செய்தொன் றுணுல்
நவமான வேதாந்த ஞானசித் தாந்தமே.

மேற்கூறிய மகாவாக்கியப் பொருளாகிய அது நீயாயிருக்கிறுய். (சிவோகம்) சிவமே நானென்னும் ஐக்கிய ஞானம் விளங்குவது வேதாந்த சித்தாந்தமெனவும். அதுபோல் மற்ற நான்கு அந்தமும் (சிவோகம்) சிவமே நானெனும் ஐக்கிய ஞானவனுபவத்தையுண்டு பண்ணுது. ஆகலின், (அவ்வவ்விரண்டும்) நான்கு அந்தமும் அவமாகுமெனவும், எப்போதும் ஐக்கியமா (ஏகமா)யுள்ள சிவம் விளங்காமல், சிவன் அனுக்கிரகஞ்செய்து சிவமே நானெனும் ஐக்கிய ஞானவனுபவம் விளங்குகின்றதனுல் சித்தத்தின் ராசத தாமத விருத்தி நீங்கிய சுத்த சத்துவ சித்தத்தில் அவ்வைக்

கிய ஞானம் புதிதாகவுண்டானதுபோல் விளங்கு மென்பதாம் (நவம் — புதிது)

2394. சித்தாந்தத்தே சீவன் முத்தி சித்தித்தலாற்
சித்தாந்தத்தே நிற்போர் சீவன் முத்தி சித்தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலால்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே

வேதத்தின் அந்தமாகிய உபநிடத்திற் கூறுகின்ற மகாவாக்கியம் (சிவோகம்) என்னும் ஐக்கியத்தை ஞானசாரியராலுபதேசிக்கப்பெற்று சித்தத்தின் அந்தமாகிய சித்தந் தெளிந்த நிலையில் ஐக்கிய ஞானனுபவம் விளங்கி சீவன் முத்தி சித்திக்கிறது. அதனல் அந்நிலையில் சிவாகாரமாய் நிற்போர் சீவன் முத்தி சித்தித்தவராம். ஆகலின். சித்தத்தின் அந்தமாகிய தெளிந்த சித்தத்தில் சிவோகம் என்னும் ஐக்கியம் விளங்குவதே வேதாந்தத்தின் செம்பொருள். இதுவே சிவோகம் என்னும் ஐக்கிய ஞானமாம் சித்தமுடிவில், அதாவது, ராசத தாமதவிருத்தி நீங்கிய சுத்த சத்துவ சித்தத்தில் வேதாந்தம் சிவனைக் காட்டுமென்பதாம்.

2384. ஆவுடை யானை அரன்வந்து கொண்டபின்
தேவுடையான் எங்கள் சீர்நந்தி தாள்தந்து
வீவலற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூவியருளியக் கோனைக் கருதுமே.

பசுவாயிருந்து அரன் அருளால் ஆட்கொண்டபின் பசுத்தன்மை நீங்கி, சிவம் தானக விளங்கும் ஐக்கிய ஞானம் அடைந்த சீவன்முத்தன் அரன் அருளால் தான் பெற்ற ஐக்கிய ஞானனுபவத்தையும் பேரானந்த அனுபவத்தையும் நினைந்து நினைந்து, சிவனது கருணையை வியந்து வியந்து மகத்துவங்களைச் சிந்திப்பன். வேதாந்த சித்தாந்தத்தின் மேன்

மையை, அதாவது, சித்தத்தின் அந்தத்தில் (சித்தத்தின் தெளிவில்) உண்டான ஞானுனுபவ மகத்துவத்தை வெளிப்படச் சொல்லுவன், பராபக்தியுள்ள (அயரா அன்புள்ள)வனுயிருப்பன்

2385. கருது மவர்தங் கருத்துக் கொப்ப
அரனுரை செய்தருள் ஆகமந் தன்னில்
வருசம யப்புற மாயைமா மாயை
உருவிய வேதாந்த சித்தாந்த வுண்மையே.

முற்கூறிய முறையாக வேதாந்த சித்தாந்தத்தின் உண்மை அனுபவமாகிய ஐக்கிய ஞானம் பெற்ற பராபக்தியுள்ள சீவன் முத்தனது ஞானுனுபவத்திற்குச் சமானமாகவே இறைவன் அருளிச்செய்த ஆகமங்களிலும் சித்தத்தின் அந்தமே சித்தாந்தம் என்று ஆராய்ந்துணர்ந்து வேத புறம்பான மதங்களை நீக்கி, வேத உடம்பாடாகவுள்ள சமயத்தையனுஷ்டித்து, மாயை — ஆணவ மலம்; மாமாயை — திரோதாயி மலம்; நீங்கப்பெற்றதே வேதாந்த சித்தாந்தமும் ஆகம சித்தாந்தமுமாம். இதுவே உண்மைப் பொருளாம்.

இவ்வகையானும், வேதாந்தம் சித்தாந்தம் சமரசம் என்றும், வைதீகம் சைவம் ஒன்றென்றும் உணர்தற்பாலதாம்.

26. வேத முடிவான வேதாந்த சித்தாந்தமும், ஆகம முடிவான சைவ சித்தாந்தமும் அத்வைதமே கருத்தென்றும், கடவுளைக் காட்டும் என்றும் கூறல்.

ஒழிவிலொடுக்கத்தில்

பெண்ணு ணலியாய்ப் பிறந்து வளர்ந்தொழியும்
எண்ணுத பேதமியல் பின்றிப் — பண்ணுங்கால்

காரணகர்த்தா வொருவனுண் டவனைக் காட்டுநூல்
ஆரணமும் ஆகமு மாம்.

என்று கூறியிருப்பது காண்க.

எல்லா தேசத்திலும், எல்லாக் காலத்திலும் எல்லா வஸ்துவிலும் நிறைந்து பரிபூரணமாயிருப்பது சிவம். சிவமாகிய கடவுளைக் காட்டும் நூல் வேதாந்த சாஸ்திரமும் சித்தாந்த சாஸ்திரமும் என்று கூறுவதாயினும் சிவத்திற்குச் சத்து, சித்து, ஆனந்தம், நித்தியம் பூரணம் முதலான சொரூப இலட்சணத்தையும், அத்வைதம், அகண்டம், அசங்கம், அமலம், அவிகாரம் முதலான அதத்வியா விருத்தி இலட்சணத்தையும் உலக சிருட்டியாதிக்குக் காரணகர்த்தாவென்னும் தடஸ்த இலட்சணத்தையும், ஷட்குணம் எண் குணம் முதலான குண விசேணமுடைய (குணவிசிஷ்ட) இலட்சணத்தையும் நூல்கள் கூறுகின்றன. அவற்றில், (1) சொரூப இலட்சணத்தையும் அதத்வியா விருத்தி இலட்சணத்தையும் பிரதானமாகப் பிரதிபாதிக்கின்றது வேதாந்த சாஸ்திரமே.

வேதாந்த சாஸ்திரம், ரிபு கீதையில்,

இந்நூலா லித்துவித மனைத்து நீங்கும்
இந்நூலா லத்துவித மொன்றே தோன்றும்
இந்நூலா லிதயமுடிச் சிறப்ப தாகும்
இந்நூலாற் சீவத்துவ நசிப்ப தாகும்
இந்நூலாற் பவதுக்க மனைத்துந் தீரும்
இந்நூலாற் பரமான சுகமே சாரும்
இந்நூலாற் பாசமெலா நசிப்ப தாகும்
இந்நூலாற் பரமபதங் கிடைப்ப தாமே.

சாற்றியிடு மிந்நூலுஞ் சாத்தி ரங்கள்
சகலத்துஞ் சாரமதாஞ் சித்தாந் தங்காண்
வேற்றுமையி லிந்நூலே வேதாந் தங்கள்
அனைத்துக்கு மேலான சித்தாந் தங்காண்
சாற்றியிடு மிந்நூலே பூன்ற போதம்
பொருந்தியுள பெரியோரின் சித்தாந் தங்காண்
ஏற்றியிடு மிந்நூலே யிணையொன் றற்ற
யெமதீசன் யெமக்கருளும் சித்தாந் தங்காண்.

இந்நூல் அத்வைத ஞானத்தைப் பிரபலமாகக் கூறுகின்றது. இதுவே வேதாந்த சித்தாந்தம், சிவம், பிர்ஹ்மம், பரம்பொருள், நிர்க்குண சொரூபம், அத்வைதம் என்னும் வாசகங்களுக்குப் பொருள் ஒன்றே.

(2) தடஸ்த இலட்சணத்தையும், ஷட்குணம், எண்குணம் முதலான குண விசிஷ்ட இலட்சணங்களையும் பிரதானமாகப் பிரதிபாதிக்கின்றது சைவ சித்தாந்த சாஸ்திரம். சித்தாந்த சாஸ்திரத்தில் முதன்மையான சிவஞான போதத்தில், முதல் 2 சூத்திரம் தடஸ்த இலட்சணம் குணவிசிஷ்ட இலட்சணத்தையும், 6, 7 சூத்திரம் சொரூப இலட்சணத்தையும், அதத்வியாவிருத்தி இலட்சணத்தையும், 8ல் குருவுபதேசத்தையும், 9ல் மித்தையாபுத்தி பூரவகமாய் சமாதி அப்பியாசத்தையும், 10ல் (சிவேனைக்கியம் கத:) 'அவனே தானேயாகிய அந்நெறி ஏகனாகி' என்னும் வாக்கியத்தால் அத்வைத ஞானத்தையும், 11ல் (பரா பக்திம் குர்யாத்) (அயரா அன்பின் அரன் கழல் செலுமே) என்னும் வாக்கியத்தால் ஆனந்தானுபவமும் 12ல் ஞானாதிகாரம் பெறுவதற்கு அனுஷ்டிக்க வேண்டிய சாதனங்களையும் முறையாகக் கூறியுள்ளது. இதுவே சைவ சித்தாந்தம். இவ்விரு சித்தாந்த

சமரச அனுபவமே நன்னிலேயென்று ஸ்ரீ தாயுமான சுவாமிகள் கூறியுள்ளனர்.

வேதாந்த நூலுணர்ந்தவர்கள் இவ்வாறு பொருள் கொள்வதினுல் சமரசக் கொள்கையும் முத்திக்குச் சாதனங்களும் அவர்கட்குளதாகும் இதற்கு மாருகப் பொருள் கொள்பவர்கட்குச் சமாசம் விளங்காது; முரணுகக் கூறுவார்கள். திருமந்திர முதலான நூல்களினுலும் சையுக்தியினுலும் சமரசம் விளங்குவதற்குசிதமான ஆராய்ச்சியே இறைவன் அருள் பெறுவதற்கேதுவென்றறிந்தனுஷ்டித்தலே நலமென்றுணர்க.

27. சாதகர் அனுஷ்டிக்கவேண்டிய கிரமமும், சாத்தியரான ஞானிகள் நிலேயும்,

சைவ சமயாசாரமுள்ளவனுய் விபூதி தரித்தல், ருத்திராக்ஷம் அணிதல், பஞ்சாட்சர ஜெபம், மூர்த்தியாதிகளின் பூஜை. தியானம் முதலியவற்றை நிஷ்காமமாய் செய்து, சித்த சுத்தியுள்ளவனுய் நித்தியாநித்திய வஸ்து விவேகம் முதலிய நான்கு சாதனங்கள் பூரணமானவன் ஞானுசாரியர் முகமாய் விதிப்படி சிரவணுதி விசாரஞ்செய்து. அனுத்மாவாகிய சரீரம் வேறு, ஆத்மா வேறு என்று சிற்சடங்களேப் பிரித்தறியும் விவேகமுள்ளவனுக்கு அப்பியாச மிகுதியினுல் சிவபரம் பொருள் எல்லா தேசத்திலும் எல்லா காலத்திலும், எல்லா வஸ்துவிலும் நிறைந்து பூரணமாயுள்ளது என்னும் பூரண பாவனேயுளதாம்.

ஞானவாசிஷ்டத்தில்

ஊற்றமுறு பாவனேயின் பரிச யத்தா லொன்றை யொன்ரு
மாற்றிவிட மமுதாக்கி யமுதத்தை நஞ்சாக்கி மருவா நிற்பர்

ஏற்றமிகு சத்தியபா வனையாலே பித்தேகந் தேக மான
தோற்றியயித் தேகமீண்ட சத்தியபா வனையால்
விண்சொரூப மாய்ப்போம்.

அறிபொருளை விட்டகன்று லழியுஞ் சித்த
மந்தநிலை வியாபார மனைத்து மில்லா
செறிநனவிற் சுழுத்தியா மதனை நாளும்
தீராத பரிசயமே செய்யச் செய்யப்
பிறிவில்முது துரியமா மென்பர் மேலோர்
பிழையிலாவி தனிலே நிலைமை பெற்று
குறியறுமா னந்தமே காந்த சீலக்
கொள்கையால னந்தங் கூடு மன்றே.

உரைகளுக் கெட்டா துளத்தனு பவிக்கிலு
றுவதா முரைத்தவத் துரியம்
கரையறு மிவைகள் முழுதுமப் பொருளாங்
கனபரி ணமியா முள்ளம்
வரைவற வொடுங்கி லுட்புற மெங்கு
மன்னிய சராசர வடிவாம்
புரையறு தேவ தேவனும் பரமப்
பொருளனு பவப்படுந் தானே.

**ரிபு கீதையில்**

நரர்சுரராய்த் திரியக்காய் நகவனுதி
நாநாவாய் நாடியிடு நாட்ட மெல்லாந்
தெரிவுருவாய்த் திகழ்கின்ற தேவதேவன்
றிருவுருவே யென்றுதிடத் தியானஞ் செய்யில்
யிருகுணமு மிகந்தமலசத் துவமேலா
யிருக்கின்ற சூட்சுமமனே விருத்தி கொண்டே
பரமசிவன் பரிபூன்ற சொரூபந்தன்னைப்
பார்த்திடலாம் மற்றென்றுற் பார்க்க வொண்ணு.

குறுந்திரட்டில்

போதமாத் திரமே யாகப் பொருந்திய சாட்சி யின்கண்
ஏதமின் மனதை நன்கு யிருத்தி நற்பழக்கத் தாலே
சாதுவே மெள்ள மெள்ளச் சலனமில் லாது செய்து
தீதிலா பூர ணத்தைத் திகழவே நோக்க வேண்டும்.

ஏதமாம் தேகம் பிராண னிந்திய மனத கந்தை
யாதியஞ் ஞான்த் தாலே யாக்கிய வுபாதிக் கூட்டம்
ஏதுவில கண்ட போத வின்பமாந் தன்னுன் மாவை
ஓதிய மகாகா சம்போ லொன்றென வுணர வேண்டும்.

அண்டமெண் டிக்கெங் கண்ணும் அடங்கசூ னியம தாகக்
கண்டுகொண் டிருக்கக் கண்ட கருத்தையும் அறவே விட்டால்
அண்டமெண் டிக்கெங் கண்ணுமாய் நின்ற வானந் தத்தைக்
கண்டுகொண்டிருக்கும்வண்ணங்கருத்தில்வந்துதிக்குமன்றே.

ஞானவாசிஷ்டம்

அந்தவனு னந்தமா னந்தமென்னும் அறிவின
தீதந்தன்னை யடைந்து ளோனை
தொந்தமிலா யோகியெனச் சொல்ல லாகுந்
துரியாதீ தந்தனையுந் துன்னி னேனும்
பந்தமுறு பவம்போய் தாமத்தால் வந்த
பலவபிமா னங்கள்போய் பரம வின்பம்
நந்தலிற்றன் மயமாம்சற் பாவந் தன்னில்
நன்னீரி லுப்புபோல் நன்கு யொன்கும்.

இங்கு காட்டிய முறைகளையுணர்ந்து அப்பியா சஞ்செய்கின்ற தீவிரதர முமுட்சுவுக்குப் பூரண பாவனையின் திடமும், அத்வைத ஞானமும் ஆனந் தானுபவமும் உளதாம். இவ்வனுபவமுள்ளவனைச் சீவன்முத்தனென்று கூறுவர். சைவசமயாசாரியர் நால்வர்களும் திருவாசக தேவாரங்களில் அத்வைத

அனுபவத்தையும் ஆனந்தானுபவத்தையும் ஓதியுள்ளார்கள்.

### மாணிக்கவாசகர் திருவாசகம்

தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச்
சங்கரா யார்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா வுடலிடங் கொண்டா
யானிதற் கிலனோர் கைமாறே.

இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லையா
ருன்னை அறியகிற் பாரே.

நிலநீர் நெருப்புயிர் நீள்விசும் புநிலாப் பகலோன்
புலனா யமைந்தனோ டெண்வகை யாப்பு ணர்ந்து நின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத் தானொரு வனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ.

### சம்பந்தர் தேவாரம்

தேவராயும் அசுரராயு சித்தர்செழு மறைசேர்
நாவராயும் நண்ணுபாரும் விண்ணெரிகா னீரும்
மேவராய விரைமலரோன் செங்கண்மா வீசனெனும்
மூவராய முதலொருவன் மேயதுமுது குன்றே.

பற்றுமாகி வானுளோர்க்குப் பல்கதிரோன் மதிபார்
எற்றுநீர் தீக்காலு மேலேவிண்ணிய மானனோடு
மற்றுமாதோர் பல்லுயிராய் மாலயனு மறைகள்
முற்றுமாகி வேறுமானன் முதுகுன்றே.

## அப்பர் தேவாரம்

பத்திமையாற் பணிந்தடியேன் றன்னை பன்னாட்
பாமாலைப் பாடப்பயில் வித்தானை
எத்தேவு மேத்துமிறை வன்றன்னை
யெம்மானை என்னுள்ளத் துள்ளே யூறும்
அத்தேனை யமுதத்தை ஆவின் பாலை
அண்ணிக்குந் தீங்கரும்பை அரனையாதி
புத்தேளைப் புள்ளிருக்கும் வேளூ ரானை
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே.

கற்றவர்க ளுண்ணுங் கனியே போற்றி
கழலடைந்தார் செல்லுங் கதியே போற்றி
யற்றவர்கட் காரமு தானாய் போற்றி
யல்லலறுத் தடியேனை யாண்டாய் போற்றி
மற்றொருவ ரொப்பில்லா மைந்தா போற்றி
வானவர்கள் போற்று மருந்தே போற்றி
செற்றவர்தம் புரமெரித்த சிவனே போற்றி
திருமூலத் தானனே போற்றி போற்றி.

(திருமணியைத் தித்திக்குந் தேனைப் பாலைத்
தீங்கரும்பினின் சுவையைத் தெளிந்த தேறல்.)

இறையவன்கா ணேழுலகு மாயினன்கா
ணேழ்கடலுஞ் சூழ்மலையு மாயினன்காண்
குறையுடையார் குற்றேவல் கொள்வான்றன் காண்
குடமூக்கிற் கீழ்க்கோட்ட மேவினன்காண்

மறையுடைய வானோர்பெரு மான்றான்காண்
மறைக்காட் டுறையுமணி கண்டன்காண்
கறையுடைய கண்டத்தெங் காபாலிகாண்
காளத்தியா னவனென் கண்ணுளானே.

#### சுந்தரர் தேவாரம்

ஊனா யுயிரானா யுடலானா யுலகானாய்
வானாய் நிலனானாய் கடலானாய் மலையானாய்
தேனார் பெண்ணைத்தென் பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையு
ளானா யுனக்காளா யினியல்லே னெனலாமே.

மேலும், ஆனந்தானுபவ மேலீட்டினால் இவை முதலிய திருவாக்குகளால் சிவபரம்பொருளைத் தித்திக்குஞ் சிவபதம், தீங்கரும்பு, தித்திக்குந் தேன், தெள்ளமுதம், ஆனந்தமலை என்பதாக அநேக அமுத மொழிகளால் ஆனந்த சொரூபம் என்று வர்ணித் துள்ளார்கள்.

அன்றியும், அஷ்ட மூர்த்தங்கள், பஞ்ச பூதங்கள், பௌதிகங்கள், உயிர்கள் (சீவராசிகள்) முதலிய எல்லாவுலகங்களுமாக சிவபரம்பொருள் உள்ள தென்னும் அத்வைத கருத்துள்ள அனேக திருவாக்கு களால் சிவம் அத்வைதமென்று வர்ணித்துள்ளார்கள்.

இவ்வாறாக அத்வைதம் ஆனந்தம் என்னும் சிவத்தின் இலட்சணங்களை ஓதியுள்ளமையின் சைவ சமயாசாரியர் நால்வரும் அத்வைத ஞானமும் ஆனந் தானுபவமும் உள்ளவர்களே. துவைதத்தில் சத்திய புத்தியுள்ளவர்களல்லவென்று ஆன்றோர் முன்னிலை யில் ஆராய்ந்துணர்பவர்கட்கு விளங்கும்.

வேதாந்த நூல்களில் பிர்ஹமம் சத்தியம் சர்வம் பிர்ஹ்மம், சர்வம் மித்தை, பிர்ஹ்மம் அத்வைதம்

என்று கூறுகின்ற வாக்கியார்த்தங்களுமிவையே. ஆகலின், தேவாரம் திருவாசகங்களின் தாத்பரியம், அத்வைதமென்று வைதீக ஞான விஞ்ஞானமுள்ளோருணர்வார்கள்.

ஸ்ரீ ராமலிங்க சுவாமிகள் அருளிச்செய்த அருட்பா மகாதேவமாலையில்.

மெய்ஞ்ஞான விருப்பத்தி லேறிக் கேள்வி
மீதேறித் தெளிந்துஇச்சை விடுத லேறி
அஞ்ஞான மற்றபடி யேறி வுண்மை
யறிந்தபடி நிலையேறி அதுதா னென்னுங்
கைஞ்ஞானங் கழன்றேறி மற்ற தெல்லாங்
கடந்தேறி மௌனயியற் கதியி லேறி
எஞ்ஞானம் அறத்தெளிந்தோர் கண்டுங் காணேன்
என்கின்ற வனுபவமே யின்பத் தேவே

என்று ஞான பூமி ஏழிலேறித் தெளிந்தோர் கண்டும் காணாத அனுபவ வடிவமே சிவம்பரம் பொருளென்று கூறியுள்ளார்.

மேலும். ஆனந்தானுபவ மேலீட்டினால் சிவசொரூபமாகிய ஆனந்தத்தை அனேக அமுத மொழிகளால் வர்ணித்துள்ளனர்.

லோக ரக்ஷணையின் பொருட்டு ஈஸ்வராஞ்ஞையால் அவதரித்த அவதாரபுருஷர்கள் சீவன் முத்தர்களாய் (சிவஞானிகளாய்) இருந்துகொண்டு உலோக உபகாரமாக சரியை கிரியையாதிகளைப் பகிர்முகமாய் வியவகார திருஷ்டியில் பலவிதமாகச் செய்தபோதிலும், அந்தர்முக பாரமார்த்திக திருஷ்டி மாறாத அனுபவத்தில் ஒரே சிவாகாரமாய், அதாவது, சிவபரம் பொருளின் சிந்தையுள்ளவர்களாகவே இருப்பர்கள்.

**ஞானவான்களின் நிலை**

நித்தியம் பத்தி பூசை நிஷ்டையுந் தவங்கள் தானம்
சத்தியம் அறங்கள் ஓமம் சமம்தமம் விரதம் சாந்தி
பத்தியாய் வேத கீதம் பலபல தொழில்செய் தாலும்
சத்தியம் இவைகட் கெல்லாஞ் சாட்சியென் றிருப்பான் ஞானி

சீவன் முத்தன் தான் பெற்ற பேறு உலகம் பெற வேணுமென்னுங் கருணையினல் விகிதமாயுள்ள பிராரப்தத்தை அனுசரித்துச் சற்கமானுஷ்டானங்களைச் செய்யினும். அவற்றில் சம்மந்தமில்லாமல் சாட்சி மாத்திரமாயிருப்பன். அவனைச் சிவஞானி என்று கூறுவர்.

28. முத்திநிலை.

முத்தி - விடுதலை, உடலுள்ளபொழுதே அகந்தை மமதையாகிய பந்தத்தினின்று விடுதலையடைந்த சீவனுக்கு முத்தன் என்று பெயர். அன்றியும், அத்வைத ஞானமுள்ளவனய் சிவானந்தம் அனுபவிப்பன் சீவன் முத்தன். பாசங்கள் விடுபட்டு பசுத்துவம் ஒழிந்து அப்பும் உப்பும்போல் அல்லது பாலும் நீரும்போல் மனம் சிவாகாரமாயிருந்து ஆனந்தம் அனுபவிக்கின்றவன் சீவன்முத்தன். ஆனந்தம் அனுபவிப்பதற்குச் சீவன்முத்தனிடத்தில் அருவ மனம் உள்ளது. ராசத தாமதமாகிய உருவ மனம் ஞானத்தினல் நாசமாகி விட்டது என்றுணரவும்.

மனநாசம் இரண்டு விதம் என்று கைவல்ய நவநீதத்தில்.

மனநாசஞ் சொரூபமென்றும் அரூபமென்றும்
வகுத்துரைப்பா ரிருவகையாய் வருமிவற்றில்
வினவாதசீ வன்முத்த ரிடத்திலொன்றும்
விதேகமுத்த ரிடத்திலொன்றும் மேவுங்கண்டாய்

தனதானசத் துவமாய்மனஞ் சேடித்துத்
தமசுரச சுகள்நசித்தல் சொரூபநாசம்
அனகாசத் துவந்தானும் இலிங்கதேக
மடங்கும்போ தடங்குதலே அரூபநாசம்

என்று கூறியிருப்பது காண்க.

பசுத்துவம் நீங்கிய சீவன் சாட்சியாக விளங்குகின்றான். சீவனுக்குச் சாட்சியே நிஜ ஸ்வரூபம். சீவனது நிஜ ஸ்வரூபத்தை ஆத்ம சப்தத்தால் வேதாந்தங் கூறுகின்றது. அகண்டமாயும், அசங்கமாயும், பரிபூரணமாயும், சத்துசித்து ஆனந்தமாயுமுள்ள சிவமே தேகத்தினுள்ளுஞ் சாட்சியாகப் பிரகாசிக்கின்றது. ஞானத்தினல் அஞ்ஞான பாசங்கள் நீங்கிய சீவன்தான் சாட்சியாக விளங்கும் நிலையில் தன்னைச் சிவமாகக் காண்கின்றான். அதாவது, பரிபூரண நிலை சாட்சாத்காரமாகின்றது.

இவ்வாறு இறைவனருளால் (சீவன் சிவம், சிவம் சீவன். அதாவது ஆத்மா பிர்ஹ்மம். பிர்ஹ்மம் ஆத்மா) என்னும் ஐக்கிய ஞானம் பெற்றவன், அத்வைத ஞானமும் ஆனந்தானுபவமும் உள்ளவனும்

அத்வைதம் — துவைதமில்லாதது என்று மனக் கண்ணுலுணரும் அனுபவமின்றி இரண்டாயிருந்து இரண்டு தோன்றமல் ஒன்றயிருத்தல் அத்வைதம் எனல் பொருந்தாது. இரண்டு ஒன்றகாது ; ஒன்று இரண்டாகாது.

மேலும், அனர்த்த நிவர்த்தி ஆனந்த பிராப்தியே மோக்ஷம். அதனை நித்திய நிவர்த்தத்தின் நிவர்த்தி என்றும், நித்திய பிராப்தத்தின் பிராப்தி என்றும் வேதாந்தங் கூறுகின்றது. ஞானிகளனுபவம் இதுவே.

கண்டமில்லாதது அகண்டம். சங்கமில்லாதது அசங்கம். விகாரமில்லாதது அவிகாரம். மலமில்லா தது அமலம் என்று பொருள் கொள்வதுபோல துவைதமில்லாதது அத்வைதம் என்று பொருள்கொள் வதால் அத்வைதம் என்னும் சொல்லிற்கு வேறு பொருள் கற்பிக்க இடமில்லை. சிவம், சத்தியம், அத் வைதம் என்னும் வாக்கியத்தின் பொருளையே (பிர்ஹ்ம சத்தியம் ஜகன் மித்தையா ஜீவோ பிர்ஹ்மை வநாபர:) என்று ஆதி ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள் கூறியுள்ளார்கள். ஆனதால், அத்வைதம் என்னும் பதம் உள்ளும் புறமும் தோற்றுகின்ற நாம ரூப துவைதங்களை மித்தை என்று நிஷேதித்து (தள்ளி) உள்ளிலும் புறம்பிலும் சச்சிதானந்த சிவம் ஒன்றே யுள்ளதென அறிவிப்பதாம். எப்போதும் அத்வைத மாயுள்ள சிவமே அத்வைதம் என அனுபவத்தில் விளங்குவதே ஞானம். இதுவே உள்ளதை உள்ளபடி யுணர்தலாம்.

அத்வைத ஞானம், சிவஞானம், பிர்ஹ்ம ஞானம், ஆத்ம ஞானம், தத்துவ ஞானம் என்னுஞ் சொற்க ளுக்குப் பொருள் ஒன்றே.

சீவன் முத்தனுக்குப் பசுத்துவம் நீங்கியபோதே தற்போதமும் உருவ மனதும் ஒழிந்துபோயிற்று. அவை ஒழிந்த சீவன்முத்தன் ஞான நிலையில் அருவ மனது இருத்தலினுல் ஆனந்தம் அனுபவித்து பிரா ரப்த தேகம் விழுஞ் சமயத்தில் அருவ மனது நாச மாகும். சீவன்முத்தன் தேகமின்றிய விதேகமுத்தி யடைவன்.

கைவல்லிய நவநீதத்தில்

அரியமெய் ஞானத் தீயால் அவித்தையாம் உடல்நீ ராகும்
பெரியதூ லமுங்கா லத்தால் பிணமாகி விழும்அந் நேரம்
உரியசூக் குமச ரீரம் வுலையிரும்பு உண்ட நீர்போல்
துரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தில் இறந்து போமே.

கடமெனும் உபாதி போனல் ககனம்ஒன் றுனற் போல
உடலெனும் உபாதி போன வுத்தரஞ் சீவன் முத்தர்
அடிமுடி நடுவு மின்றி யகம்புற மொன்று மின்றி
படிதிகழ் விதேக முத்திப் பதமடைந் திருப்பர் என்றும்

என்று கூறியிருப்பது காண்க.

சீவன் முத்தியில் ஆனந்தம் அனுபவித்த அருவ மனம், விதேக முத்தியில் இரும்புண்ட நீர்போலும் கர்ப்பூர தீபம்போலும் ஒழிந்து ஆத்மா சிவானந்த மாய் நிலைத்தல் முத்தியாம். அதாவது, நிருபாதிகமா யிருத்தலே முத்தி.

ஆனந்தமாய் நிலைத்தலேயே பாலில் பால்போலும் தேஜசில் தேஜசு போலும் ஆகாயத்தில் ஆகாயம் போலும் ஆத்மாவும் சிவமும் அபேதம் (ஒன்று) என்று வேதாந்தங் கூறுகின்றது.

29. யுக்தி பூர்வக திருட்டாந்தம்.

சமுத்திரம் சலம் ஒன்றே மேகமாகிய வுபாதி யினுல் நதி சலம், ஓடை சலம், ஏரி சலம், குளத்து சலம், குட்டை சலம், வாய்க்கால் சலம், வயல் சலம், கட சலம், கலச சலம் இவை முதலியனவாக வேறு வேறு நாம ரூபங்களையடைந்து எண்ணிறந்த பேதங் களையுடைய சலங்களாக விவகரிக்கின்றோம் சமுத்திர சலம் ஒன்றே இவ்வாறு பேதமாய் விவகரிப்பதற்குக்

காரணமாகின்றது. அவ்வாருயினும் இந்த விவகாரத்தின் சம்மந்தம் சமுத்திரத்திற்கில்லை.

இத்திருட்டாந்தம்போல் எல்லா தேசத்திலும், எல்லாக் காலத்திலும் எல்லா வஸ்துவிலும் நிறைந்து பரிபூரணமாயுள்ள அத்வைத சிவம் ஒன்றே பாதிதமான மாயையாகியவுபாதியினுல் ஆணவாதிமலமுடைய எண்ணிறந்த சீவராசிகளாகத் தோன்றி எழுவகைப் பிறவியிலும் இரு வினையின் சம்மந்தமாய் அவற்றின் பயனுகப் பிறப்பு இறப்பு முதலிய சம்சார துன்பங்களையனுபவிக்கின்றனர்.

இவ்வாறு, எண்ணிறந்த சீவராசிகளாத்தோன்றி பிறப்பு இறப்பு முதலிய சம்சார துன்பங்கள் அனுபவித்தற்குச் சிவமே காரணமாகின்றது.

அவ்வாருயினும், வியவகாரிக சீவராசிகளின் பிறப்பு இறப்பு முதலிய சம்சாரத்தின் சம்மந்தம் சிவத்திற்கில்லை.

சமுத்திரமானது தன்னை நோக்கி வருகின்ற நதி முதலிய எந்த சலத்தையும் அந்தந்த சலத்திலுள்ள அசுத்தங்களைத் தன் அலையினுல் நீக்கித் தன்னில் ஒன்ருக்கிக்கொள்கின்றது.

எல்லாம் வல்ல இறைவனுகிய சிவமும் தன்னிடத்து ஒரே நோக்கமாய் அன்பு செய்கின்ற எந்த சீவனையுங் அந்தந்தப் பசுவாகிய சீவனிடத்துள்ள பசுத்துவமாகிய சீவபோதம் (தற்போதத்தை) ஆணவமலத்துடன் தன் அருள் சத்தியினுல் நீக்கி (நீருக்கி) அதாவது, நாசஞ்செய்து தன்னில் ஒன்ருக்கிக்கொள்கின்றது.

சமுத்திர சலத்தில் ஐக்கியமான (ஒன்றான) நதி முதலிய சலத்துக்கு சமுத்திரத்தின் சுபாவ குணமே யுளது.

சிவத்தில் ஐக்கியமான (ஒன்றான) ஆத்மாவிற்கு சிவத்தின் சத்துசித்து ஆனந்தம் முதலிய சுபாவ குணமேயுளதாம்.

30. நிர்க்குண சிவபரம்பொருளின் உபதேசமே ஞானவுபதேசம். மும்மூர்த்திகளும் சகுணமான தன் வடிவத்தை மாயீகம் (கற்பனை) என்றும், தன் நிஜ ஸ்வரூபம் நிர்க்குண பரம்பொருள் என்றே தன் தன் மாணாக்கர்களுக்கு உபதேசித்துள்ளனர். அவரவர்கள் உபதேசித்த கீதைகளில் காணலாம்.

நிர்க்குண சிவபரம்பொருள் அத்வைதம் நிர்க் குணத்தில் சிவமும் ஆத்மாவும் ஒன்று எனும் ஐக்கி யானுபவம் சீவன்முத்தனுக்குளதாம்.

இதுவே வேதாந்த ஆசிரியர்கள் பரிபாகமுள்ள சிஷ்யர்களுக்குபதேசிக்கின்ற மகாவாக்கியப் பொரு ளாம். வேதாந்த சாஸ்திரம் சாதனங்கள் வந்த அதி காரியைக் குறித்தே மகாவாக்கியார்த்தத்தைப் பிரதி பாதிக்கின்றது ஆகலின், ஞானாதிகாரி வேதாந்த ஆசிரி யரிடத்தும் வேதாந்த சாஸ்திரத்திலும் பூரண நம்பிக்கை யுள்ளவனாய் ஞானத்தின் பகிரங்க அந்தரங்க சாதனங் களை அனுஷ்டித்து குரு கிருபையினாலும் இறைவன் அருளினாலும் அனர்த்த நிவர்த்திக்கும் ஆனந்தப் பிராப் திக்கும் ஏதுவான சிவோகம் (சிவமே நான்) என்னும் ஐக்கிய அனுபவத்தை அபரோக்ஷ சாட்சாத்காரமாய் பெற்று சீவன்முத்தனாய் சிவானந்தமனுபவித்து

பிராரப்த முடிவில் மீண்டு பிறத்தலின்றிய சிவானந்த சொரூபமேயாகிய விதேக முத்தியடைவன்.

சீவன் முத்தி அநுபவத்திற்கு ஏதுவான அத்வைத நிச்சயத்தை ரிபு கீதையில்,

அற்பமுமோர் பேதமிலா தகண்ட மான
அத்துவித பரசிவமே வேதாந் தங்கள்
நிர்ப்பயமாய் நிகழ்த்தியநற் பொருளாய் நின்றும்
நிகழுமனச் சுத்தியிலா மூட ரெல்லாம்
பற்பலவா நூற்களினுற் பேத புந்தி
பற்றியதா லகண்டைக பரசி வத்தைத்
தற்பரமாஞ் சுருதிமுடி முதலாம் நூலின்
தாற்பரியப் பொருளாக வறியா ரென்றும்.

நித்தசிவார்ச் சனைமுதலாம் பத்தி செய்து
நிகழுமனச் சுத்தியினைப் பெற்ற தீரர்
அத்துவித பரசிவமே மறையீ ருதி
யனைத்துக்குந் தாற்பரியப் பொருளா மென்றுஞ்
சத்தியமா மச்சிவமே நாமே யென்றுஞ்
சலனமிலா வகண்டசிவ ஞானம் பெற்று
மித்தையதாம் பவபந்த மனைத்தும் நீக்கி
மெய்யுணர்வா னந்தபர சிவமே யாவர்

என்று கூறியிருப்பது காண்க.

சிவஞான போதத்தில் 10ம் சூத்திரத்தில் (அவனே தானேயாகிய வந்நெறி ஏகனுகி) என்னும் வாக்கியத்திஞல் சீவன்முத்தன் அனுபவமும், 11ம் சூத்திரத்தில் 'அயராவன்பின் அரன் கழல் செலுமே' என்னும் வாக்கியத்திஞல் சீவன்முத்தன் பராபக்தி யுள்ளவனுய் திருவடியடைகின்ருன் என்று சீவன் முத்தன் இலக்கணம் கூறியுள்ளது. விதேகமுத்தன் இலக்கணம் விளக்கமாய்க் கூறவில்லையாயினும்

சீவன்முத்தி சித்தித்தலினுலேயே விதேகமுத்தி சித்திக்குமென்பது கருத்து.

பகவத்கீதையில்

(2வது அத்தியாயத்தில்) சீவன்முத்தன் ஸ்தித பிரஞ்ஞனுயுளனென்றும்,

(12வது அத்தியாயத்தில்) சீவன்முத்தன் பகவத் பக்தனுயுளனென்றும்,

(14வது அத்தியாயத்தில்) சீவன்முத்தன் குணதீதனுயுளனென்றும்,

(18வது அத்தியாயத்தில்) சீவன்முத்தன் பராபக்தியுள்ளவனுய்ப் பரம்பொருளை அடைகின்ருன் என்றும் ஸ்ரீ பகவான் கூறியுள்ளார்.

இதில் பராபக்தியைக் கூறுஞ் செய்யுள்,

சொன்ன யிவைபோய் அடங்கிடவே
தோன்றுங் களிப்புங் காமமுமுன்
பென்னதி யானென் கின்றதுவு
மெரிபோல் வெகுளி யொடுவலியும்
வுன்னல் தவிர்ந்து சாந்திபெறுஞ்
சாந்தி பெறவே யோரிடத்தும்
பின்ன மடையா தொன்ருகி
நின்ற பொருளின் பேருருவாம்.

(சொன்னயிவைபோய் — மனம், புத்தி, சித்தம், அகங்காரம் இவற்றின் விருத்தியின்றி தூய்தான மனம்.)

அந்தவுரு வானவன் பின்னை யாதே வரினு மழிவுருன்
இந்தவுல கத்துயிர்க் கெல்லா மொத்தே யிருக்குமீங் கிவனும்
பந்தமற விட்டெனை யறியும் பத்தி பெறுமப் பத்தியினுல்
சிந்தையிடை யேயெனைத் தெளியு மதனு லெனையே சேருமால்

இவற்றால் சீவன்முத்தன் இலக்கணம் விசேஷ மாய்க் கூறியுள்ளனர். சீவன்முத்தி அனுபவமுள்ள வனுக்கு விதேகமுத்தி இயல்பாகச் சித்திக்கின்றது எனவறிக. ஞானவாசிஷ்டம், ரிபு கீதை முதலிய நூல் களில் விதேகமுத்தனிலக்கணம் விசேஷமாய்க் கூறி யிருப்பது காண்க.

31. வேதாந்த சித்தாந்த சமரச ஆராய்ச்சி இன்மைக்குக் காரணமும், அவற்றை நிவர்த்திக்கு முபாயமும் கூறுதல்.

மனிதர்கள் சத்துவ புத்தி, ராசத புத்தி, தாமத புத்தியுள்ளவாகளாயிருப்பர்கள். அவற்றை பகவத் கீதையில்,

சத்துவ புத்தியுள்ளவர் செய்கை.

ஈன மற்றது றவற மில்லறம்
ஞானம் பற்றெடு நல்வினை தீவினை
ஆன வஞ்சுவ தஞ்சத் தகாதென
தான றிந்தது சத்துவ புத்தியே.

ராசத புத்தியுள்ளவர் செய்கை.

தருமம் பாவந் தனக்குச் செயத்தகுங்
கருமஞ் செய்யத் தகாத கருமங்கள்
அருமை யால்அறி யாத வறிவதே
இருமை யாய விராசத புத்தியே.

தாமத புத்தியுள்ளவர் செய்கை.

பாவ மாகத் தருமத்தைப் பார்த்தலும்
ஆவதா மென்று அடாதது செய்தலும்
தீமைசெய் கின்ற சிந்தனை நீங்கிலே
போவ தாவதுந் தாமத புத்திவே.

### காமத்தினுலுளதாகும் அனர்த்தங்களைக் கூறல்.

எவ்வ கைப்பய னுந்தின வல்லதை
எவ்வ கைப்பெரும் பாவமு மீவதை
எவ்வ கைப்பொருட் கும்பகை யாவதை
இவ்வ கைத்தெனக் கூறு வனின் னுங்கேள்.

நெருப்பை முற்றிய தூமமும் நீடொளித்
தருப்பணத் தைமறைத் தனமா சும்போல்
உருப்படைத் தனவுள் ளுணரி யாவையும்
விருப்ப முற்றவெங் காமம் விழிங்குமால்.

### காமத்தையடக்குதல்.

காதலாற் றவிக்கா மம்பு லன்களே
வாயி லாற்புகுந் துள்ள மயக்குவ(து)
ஆத லாற்புல ஊைந்தும டக்கியே
ஏதி லாங்கடுங் காமமி றுக்குவாய்.

### ஆசை, கோபம் பயம் நீக்குதலின் பயன்.

அஞ்சு பொறித்திறன் ஆசை யடக்கா
நெஞ்சு பயத்தொடு கோபமும் நீக்கா
வெஞ்சு திறத்தலில் யோகிகள் காணும்
உஞ்சு பிறப்பிடர் யாவுமு திர்ப்பார்.

### காமம், குரோதம், லோபம் விட்டவர் அனர்த்தம் நீங்கி ஆனந்த பிராப்தியாகிய முத்தி எய்துவரெனல்.

காதலி னுகிய காமம் லோபம்
கோ துற வேசுடு தீநிகர் கோபம்
ஆதலி னுலிவை மூன் று மகன்ருர்
வேதனை தீர்பெரு வீடுவி ளைந்தார்.

தேறு நெஞ்சின னுய்த்தன் செயலலால்
வேறுகண் டறியா மெய்ய றிவினுல்

ஊறிலிந்த வுடம்புடன் வேறு பெற்று
ஏறிநின் றவனே யின்பம் எய்துவான்

இவ்வாறு ஸ்ரீ பகவான் கூறியுள்ளார்.

வைராக்கியமும் விவேகமுமுள்ளவர் மேன்மையும் அவையில்லாதவர் இழிவும்.

எவனுடைய மனப்புற்றி லிராகமுனி
வெனும்பணிக ளியக்க மில்லை
அவனெனுங்கற் பகத்தருவா லணுகாத
தொன்றுண்டோ அறிவின் மிக்கோய்
கவனமற வறிவினல்மதத் தோராய்ப்பல
கலை நூல் கல்வி மிக்குத்
தவமறுகா மம்வெகுளி நிறைந்தோரே
வேசரிபோற் றள்ளத் தக்கோர்
மாளாத காதலெனும் வற்சநாபிக்
கொடியின் வனத்தைச் சுட்டு
நீளாசை யனைத்தும்அறுத் தவர்க்கன்றே
விப்பயன்றான் நேரா நிற்கும்
கோளான பொருளனைத்தின் முன்பொடுபின்
பினிமையிலாக் குற்றங் கண்டும்
மீளாத பாவனையாற் கட்டுண்பார்
வேசரியே வேறென் றன்றால்.
அடைய வேண்டிய தடைந்து மேற்றுன்ப
மற்றின்ப மளவி லாதாய்
கடைய தாந்தரு விலங்குப் பறவைகள்போல்
வீணாள்கள் கழியா தாகித்
தடையிலா மனனத் தால்வாழ் வதேவுயர்
வாணாள் சனனந் தீர்ந்தோர்
வுடைய பிறப்புயர்ந் ததாங்கிழவே
சரிப்பிறப்பாம் ஒழிந்த வெல்லாம்

என்று கூறியிருப்பது காண்க.

சிவஞான வள்ளலார் சாஸ்திரத்தில்,

மங்கையர் தம் யோனிமிசை வைத்திருக்கும் ஆசையினைப்
பங்குசெய்து நூற்றிலொரு பங்கெடுத்து — கங்கையணி
வேணியான் பாதார விந்தத்தில் வைத்தக்கால்
காணலாங் காணுக் கதி.

மூத்திரத்தி னனையப்பட்ட முடையோ னிக்காயக்
காத்திரத்தை விட்டார் கணக்கில்லை — சாத்திரத்தால்
வானைக்கால் தீநீரை மண்ணைப் பிரித்துசிவ
ஞனக்கால் ஆசை யறும்.

மேற்கூறிய நூல்களின் வாக்கியங்களினுல் சாராசார முணர்ந்த விவேகியின் செய்கை 'இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ' என்றும், 'இன்றைக்கிருந் தாரை நாளைக்கிருப்பரென்று எண்ணவோ திட மில்லையே' என்றும் கூறிய தாயுமானவர் திருவாக்கின் பொருளை சிந்தையில் மறவாது ஏக்கமுள்ளவனுய் நினைத்து வீண் காலம் போக்காது உறுதியான வைராக்கியமுடன் நிஷ்காமமாய்ச் சிவனை உபாசனை செய்வன்.

சிவஞானவள்ளலார்

சிவனையே தெய்வமென்று சிந்தையிற் சிந்தை செய்மின்
அவனலாற் றெய்வமில்லை யவனுக்கே யடிமை செய்மின்
தவமிலா மனித ரெல்லாம் அவனடி சார மாட்டார்
புவன வாதனைக் கடத்திப் பொன்னடிக் கமல மீவன்

என்றும்,

பிர்மானந்த சுவாமிகள்

வானினின் றெழுகு நீர்கள் வழிந்துபன் னதிக ளாகி
மானவக் கடலே சென்று மருவிடுந் தன்மை போல
வானவர் முதலோர் காறும் வணக்கங்க ளனைத்து மந்த
ஈனமில் சிவத்தை யன்றி யெவரையுஞ் சேர்த லின்றே

என்றும் கூறியிருப்பது காண்க.

இவ்வாறு. சிவபக்தி செய்கின்றவர்கட்கு சிவ பெருமானருளால் காம குரோதாதி பிரதிபந்தம் நீங்கி, வேதாந்தம் சித்தாந்தம் சகல சாஸ்திரங்களுக்கும் அத்வைதமே தாத்பரியமென்பதும், வேதாந்தம் சித் தாந்தம் சமரசம் என்பதும் கரதலாமலகம்போல் விளங்கும்.

32. மனித தேகம் உள்ளபோதே தன் சீவனை உய்விக்குமுபாயத்தைப் பின்பற்றவேண்டும்.

கடவுள் ஆணையாகிய வேதமே பிரமாணமாம். வேதத்தை அனுசரித்தே மற்ற நூல்கள் பிரமாண மாம். வேதத்தை அனுசரியாத நூல் எதுவும் பிரமாணமாகா.

ஆகலின், வேதத்திற் கூறுகின்ற கர்மகாண்ட வுபநிஷத்துக்களின் தாத்பரியமாகிய கர்மங்களை நிஷ் காமமாய்ச் செய்து மலமாகிய பாபம் நீங்கி மனஞ் சுத்தமாகி உபாசனா காண்ட வுபநிஷத்துக்களின் தாத் பரியமாகிய உபாசனையை நிஷ்காமமாய் ஈஸ்வர நாம உச்சாரண முதலிய பக்தி மார்க்கத்தை அனுஷ்டித்து ஆசை முதலிய சலனம் நீங்கி, சித்தம் ஏகாக்கிரமமாய் ஞான காண்டவுபநிஷத்துக்களின் தாத்பரியமாகிய அத்வைதத்தைப் போதிக்கின்ற மகாவாக்கியார்த் தத்தை ஞானசாரியர் முகமாக உபதேசிக்கப்பெற்று சிரவண மனன நித்தியாசனபூர்வகமாய் அனுசந்தா னஞ்செய்கின்றவனே தன் சீவனை எழுவகைப் பிறவித் துன்பத்தில் அகப்பட்டு வருந்தாதவண்ணம் அனர்த்த நிவர்த்தி ஆனந்த பிராப்தியாகிய முத்தியின்பக் கரையில் ஏற்றுபவன்.

இவற்றிற்கு சத்சங்கமே முக்கிய சாதனம்.

ஞானவாசிஷ்டத்தில்

மேவுறு துன்பப் பெருஞ்சுமை சுமந்து
மீட்சிபோக் கிவையுடற் புண்ணுய்
ஈவறு பிறவிக் குழியில் வீழ்சீவ
யெருத்திணை யிக்குழி நின்றும்
ஓவலின் முயல்வா லெடுப்பதே வலியாம்
உயர்ந்தஞா னிகளுற வுளதேல்
நாவிகர் நாவாய்த் தருவபோல் ஊகம்
நல்குவர் பவக்கடல் கடக்க

என்று கூறியிருப்பது காண்க.

சத்துவ குண புத்தியுள்ளவர் சுத்த சைவம் பற்றினவராய்த் தன் சீவனை உய்விக்கும் நோக்கத்திலேயே கருத்தாயிருப்பர். அவருக்கே வேதாகம புராணேதிகாசாதி சகல நூல்களுக்கும் தாத்பரியம் அத்வைதக் கருத்து என்பதும் வேதாந்த சித்தாந்த சமரசம் என்பதும் புலனாகும்.

மனித சென்மம் உள்ளபோதே எப்பாடுபட்டாயினும் தன் சீவனை உய்விக்க வேண்டுமென்பது சாரமான கருத்து. சிவார்ப்பணம்.

திருச்சிற்றம்பலம்.

பரமகுரு சங்கரா சாரியர் பத்ம பாதர் துரோடகர்
பரம முணர்சுரே சுரர்பக ரத்தா மலக முனிவர்
* பரம வித்தியா ரண்ய குருபத மேவு சுயம்பிர காசன்
பரம மருளா றுமுக தேசிகன் பதமலர்கள் பணிகுவாமே.

---

* ஸ்ரீ வித்தியாரண்ய சுவாமிகளியற்றிய பஞ்சதசபிரகரண நூலில் தசபுமான் திருட்டாந்தப்படி தாட்டாந்தத்தை ஊன்றியுணரும்போது ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகளுக்கு தன் நிஜ ஸ்வரூபம் அனுபவத்தில் விளங்கினதாம். அது காரணமாய் நூலாசிரியரைக் குருவென்றது.

இறைவாழி நாதனருள்வாழி தாளின்
இசைவாழி யாளும் இயல்வாழியே
மறைவாழி மோனமொழி வாழியாறு
வழிவாழி ஞானவிழி வாழியே.

ஆறிரு தடங்தோள் வாழ்க வறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க ஆனைதன் னணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீ ரடியா ரெல்லாம்.

குருபதக் கமலம் வாழி கோடிபல் லூழி காலம்
குருபத மொழியிக் கீதை குவலயத் தென்றும் வாழி
குருபத மளிக்குங் கீதை குறைவற படிப்போர் கேட்போர்
குருபத மடைந்தோர் தங்கள் குலத்தொடும் வாழி வாழி.

திருச்சிற்றம்பலம்.

சற்குருநாதன் உபயதிருவடிகளுக்கு நமஸ்காரம்.

**வேதாந்த சித்தாந்த சமரச விளக்கம்**
**முடிந்தது.**

---

# பிழை திருத்தம்

| பக்கம் எண் | வரி எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 3 | வுயர்பரமதாகும் | உயர்பதமாகும் |
| 13 | 2 | நிறையே | நிறைவே |
| 34 | 3 | வாக்கியார்த்தம் | வாச்சியார்த்தம் |
| 34 | 14 | வாக்கியார்த்தம் | வாச்சியார்த்தம் |
| 37 | 4 | அச்சனையும் | அர்ச்சனையும் |
| 39 | 10 | மொழுவர் | மொழிவர் |
| 43 | 4 | புகழ் | புகல் |
| 43 | 8 | கர்மர் | கன்மர் |
| 43 | 27 | திரிபுண்டரங்கனுகி | திரிபுண்டராங்கனுகி |
| 80 | 4 | வேறுமானுன் முதுகுன்றே | பேறுமானுன்மேயது முதுகுன்றே |

